MADRAS GOVERNMENT ORIENTAL MANUSCRIPTS SERIES No. 26.

# ஞானமதியுள்ளான்

[முத்தாநந்த சுவாமிகள் இயற்றியது.]

# ÑĀNAMATIYUḶḶĀN

BY

MUTTĀNANDA SUVĀMIKAḶ

EDITED BY

T. CHANDRASEKHARAN, M.A., L.T.

*Curator, Government Oriental Manuscripts Library, Madras*

*and the staff of the Library.*

*Under the Orders of the Government of Madras.*

PRINTED BY THE SUPERINTENDENT
GOVERNMENT PRESS
MADRAS
1952

[PRICE, Rs. 1-4-0.

MADRAS GOVERNMENT ORIENTAL MANUSCRIPTS SERIES No. 26.

# ஞானமதியுள்ளான்

[முத்தாநந்த சுவாமிகள் இயற்றியது.]

# ÑĀNAMATIYUḶḶĀN

BY

MUTTĀNANDA SUVĀMIKAḶ

EDITED BY

T. CHANDRASEKHARAN, M.A., L.T.

*Curator, Government Oriental Manuscripts Library, Madras*

*and the staff of the Library.*

*Under the Orders of the Government of Madras.*

PRINTED BY THE SUPERINTENDENT
GOVERNMENT PRESS
MADRAS
1952

# PREFACE

Life should be set up in conformity with the established truths of the cosmic nature, purely based on the bed-rock of morality, materiality, worldliness and spirituality, which were duly and ardently observed by men of lore in the past. In the good olden days, life of man had in its evolution a progressive enlightened path that never disintegrated itself into a life without any principles, but it had its integrity with principles in the practical life of man. Arts and general knowledge imbued with the true principles of life, having been sharpened on the whet-stone of active life, were being shaped into practical utility and amelioration of man.

The faculty of knowledge, while being applied in the practical life of man, assumes sentient organic form of one's own genius. The life of sentient-freasure, the life of grace-treasure, the religious life, the inspid ordinary life and the active life of deeds are nothing but the component parts with different forms to reach the life's goal. The elevated sentient life is the life of GRACE.

The exalted family life is the only ascent to the topmost rung of the ladder of spiritual guidance and GRACE. The ardent practice with indefatigable perseverance in spirituality that would lead to the REVELATION OF TRUTH is the means to attain spiritual guidance and GRACE.

A man with theoretical knowledge of life, during novitiate, enters the field of temporal pleasures according to the FLESHY SCHOOL OF THOUGHT (Sensuous and sensual pleasures) whereby he experiences the different aspects-morality, materiality and carnality which form the *sine quo non* in a man's life and lead to the progressive path of spiritual GRACE.

The present work describes the traits of the nature of King of Gondhi who exemplified himself pre-eminently, and whose noble deeds picture precisely and graphically the cardinal virtues of the gracious life. The insatiable and well saturated sublime nature which transcends the moral and sentient bounds of life, evolves itself into the discovery of TRUTH that leads to the destination of soul's liberation and the attainment of spiritual GRACE. Ever since the spiritual Grace is considered as an art, life and Grace which were deemed inseparable

and part and parcel of practical human life, have been divided into two separate parts by the so-called erudite laity by chopping logic with the weapon of blasphemy. To avoid the chopping of logic by shallow-minded laity in philosophy, the sages and seers of yore who attained ideal perfection in spirituality, promulgated that RETICENCE is the only aspect of life that outskirts SPIRITUALDOM.

One day the King of Gondhi had a dream in which he had the REVELATION OF TRUTH and on the very next day he resorted to RENUNCIATION in life by giving up his kingdom and other mundane pleasures, and he was wandering at large like a mad man in quest of SPIRITUAL GRACE which he attained in the long run by the GRACE OF ŚAKTI the GODDESS of the UNIVERSE.

The author of this literature is His Holiness Muktananda Svami who rendered the story in an unmistakable terse style. This work is based upon the manuscript bearing D. No. 1851 of the Government Oriental Manuscripts Library, Madras.

Thanks are due to Pulavar M. Pasupathy Pandit of this Library, who prepared the Press copy.

---

Madras,
27-10-1952.

T. CHANDRASEKHARAN

# முன்னுரை

வாழ்க்கை உலகியற்கை உண்மைகளாத் திகழ வேண்டும். அங்ஙனம் திகழ, அறம், பொருள், இன்பம், வீடு என்னும் குறிக்கோள் வகையில் அது நிகழ வேண்டும். இதுவே தொல்லோர்பால் தெள்ளத் தெளிய கருதப்பட்டுவந்தது. வாழ்க்கை மேன் மேலும் உண்மை காணும் வாழ்க்கை யாக பழங்காலத்தில் வளர்ச்சி நெறியில் ஓங்கிச் சென்றது. கொள்கைகள் வேறாகவும் வாழ்க்கை வேறாகவும் அக்காலத்தில் பிரிவுண்டு நிற்கவில்லை. கலைகளும் பொது அறிவுநிலைகளும் வாழ்க்கையாகிய சாணையில் இணைந்து உரசி மேன்மேலும் நுட்பமாக்கப் பெற்றுப் பயன் முகமாக விளங்கின.

அறிவுநிலைகள் வாழ்க்கை யொழுக்கங்களாகச் செயற்படும்பொழுது அவை உணர்வுநிலைகளெனப்பட்டுப் பேராற்றல் உறுகின்றன. உணர்வுக் களம், அருட்களம், சமய வாழ்க்கை, வாழ்க்கை, செய்கை எல்லாம் ஒன்றே யாகும். சிறப்புடைத்தாகக் கூறுங்கால் உணர்வுவாழ்க்கையில், உயர்ந்த உணர்வுவாழ்க்கையே அருள்வாழ்க்கை அல்லது சமயவாழ்க்கை மெய் வாழ்க்கை என்று நுவலப்படும்.

இல்லறநிலையில் உயர்ந்தபடியே ஞானநிலை அல்லது அருள்நிலை என்பது. ஞானநிலை உயர்ந்ததொன்றாதலின், அதன்கண் பயிற்சி நிலை யொன்றும் தெளிவுநிலை யொன்றும் வகுத்துக் கருதப்படும். அறிவு நிலையில் உள்ள மாணவரான ஒருவர் காதற்கற்புடைய தன் உயிர்க்கிழத்தி யோடு அன்பாற் கலந்து, இன்ப வாழ்க்கை துவங்கும் எல்லையிலிருந்தே அவர்க்கு உணர்வுநிலையாகிய (செய்கை நிலை, அநுபவ நிலை) வாழ்க்கை துவங்குதலின், இன்ப முதலான எல்லா உறுதிப் பொருள்களும் உண்மை யில் வாழ்க்கைநிலையின் கூறுகளாகவே திகழ்கின்றன. ஆதலின் வாழ்க்கை என்பது அற வாழ்க்கை, பொருள் வாழ்க்கை, இன்ப வாழ்க்கை எனக் கூறு கொண்டுள்ளது. முன்னேற்றமான இத்தகைய வாழ்க்கையின் பயனே வீடு என்பது.

இந்நூலின் பாட்டுடைத் தலைவனாக விளங்கும் கோந்திநாட்டரசனாகிய கோந்திமன்னன் வாழ்க்கையும், அருள்முகமாக விளங்கியிருந்தமையை இந் நூல் இனிது எடுத்துணர்த்துகின்றது. இந்நூல் அருள்வாழ்க்கைக் கூறு களின் தீர்ந்த ஓவியமாய் எழுந்துளது எனலாம். இதில் தெவிட்டாத திளைத்த பேராவியற்கையே, அறவாழ்க்கையின் தெளிந்த நிலையே, உணர்விறந்த இனிய உணர்வுநிலையே விடுதலைநிலை என்று கூறப்படுகின்றது. இந் நிலையை ஒரு கலையாக எண்ணியறியப்பட்ட காலத்திருந்தேதான் வாழ்க்கை வேறு, அருள் வேறு என்று பிரிந்து வெறுஞ் சொல்லாடலுக்கே அது இரையாயிற்று. இதனை உணர்த்தவே, " மோனம் வந்தநிலை ஞானம் "

என்றனர் சான்றோர். கோந்திமன்னன் இந்த ஆன்மநேய மெய்வாழ்க்கைக்கு உரியவனாகத் திகழ்ந்தவன். மாசுமறுவற்றவன். அழியாப் பேரொளியும் பெரும்பயனும் பெருமதிப்பும் உடையவனாய்த் திகழ்ந்தவன். அற முதலாக வெண்ணப்படும் உறுதிப்பொருள் நான்கில் முதன் மூவகைநிலைகளையும் துய்த்து உணர்ந்து திளைத்து, அவைகளினின்றும் விடுதலையடைய அறியானாய் இருக்குங்காலத்து ஓர்நாள் ஞானம் பெற்றாற்போல் கனவு கண்டு, பின்பு நாடு நகரங்களை நல்லார் கையில் ஒப்படைத்துப் பிரிந்து, 'யான்' 'எனது' என்னும் பற்றற்ற நிலையில், உலகம் யாங்கணும் பித்தனைப்போல் சுற்றியலைந்து, இறுதியாக சத்தியின் அருளைப்பெற்று ஞானம் எய்தி வீட்டு நிலை (மோக்ஷம்) யடைந்தனன். இவ் வரலாற்றை ஓர் கதையாக அறிவிக்கப் படுகின்றது. இவன், வீடு அடைய முயற்சி செய்யும் வாழ்க்கைநெறியே நூலாக உருவுற்றது.

இக் காலத்தில் அறம் உரைப்பவர் தாம் அறநெறியில் நிற்பவராக இருப்பதில்லை. பிறரால் புகழ்ந்து கூறப்படுவோரும் அப் புகழ்ச்சிக்கு உரியவராக இருப்பதில்லை. இந்நிலைகள் அக்காலத்தில் இருந்ததில்லை. அக்காலம் மெய்யுணர்வுடையோரின் வாழ்க்கைப்பேறுகள் புலமை யுடையோர்களால் திட்பமுற, பின்தோன்றல்கட்கு எடுத்துக்காட்டாகச் செய்யுள் வடிவில் தீட்டப்பட்டிருக்கின்றன. அத்தகைய நூல்களில் ஞானமதி யுள்ளான் என்பதும் ஒன்றாகும். இந்நூல் வெண்பா, அகவற்பா, கலிப்பா, கொச்சகப்பா, விருத்தப்பா, சிந்து என்ற பா வகைகளில் விரவிவரப்பெற்று ஆக்கப்பட்டுள்ளது. தொடர்நிலைச்செய்யுள் வடிவில் அமைந்திருக்கின்றது. இதனை ஆக்கியோர் முத்தானந்த சுவாமிகள் எனப்படுபவர். இவர் நானூறு செய்யுட் தொகைகளால், ஞானபோதம், சங்கற்பம், வித்தை, யோகம், வீடு முதலியவைகளை எளிமையான சொற்களைக் கொண்டு புனைந்து, நாம் படித்து இன்புறுதற்கு ஏதுவான முறையில் வகுத்துணர்த்துகின்றார். இந் நூல், இந் நூல்நிலைய டிஸ்கிரிப்டிவ் காட்லாக்கு 1851-ம் எண்ணிலிருந்து எடுத்து பிரதிசெய்து, பிழை திருத்தி, செம்மை செய்து அச்சியற்றப் பட்டுள்ளது.

அவ்வாறு மூலப் பிரதியிலிருந்து பெயர்த்து எழுதி, அச்சிடுவதற்குரிய அனைத்து வகைகளும் அமைத்துக் கொடுத்த இந் நூல்நிலைய புலவர்— மு. பசுபதி என்பார்க்கு எனது நன்றி யுரியதாகும்.

தி. சந்திரசேகரன்.

சென்னை, 1952-ம் ஆண்டு அக்டோபர்மீ 27உ.

## பாட்டு முதற்குறிப்பு அகராதி.

# ஞானமதியுள்ளான்

அரிவிந்து நாத முத்தி ஆனந்த பதத்தைப் போற்றிப்
பரிமுந்து பத்தர் சித்தர் பரிவுள்ளோர் தன்னை வாழ்த்தி
உரிமுந்து உழக்கி ரண்டு ஒன்றென்ற பொருளி னாலே
கரிவந்து மதியுள் ளாடும் கணபதி காப்புத் தானே. (1)

தானென்ற வடிவாய் மூலந் தருஞ்சதா சிவத்தி னாலே
வானென்ற வல்லி கையில் வந்தவன் சிக்கிக் கொண்டு
மானென்ற கோந்தி மன்னன் மதிகெட்டு மதியுள் ளோடும்
வேனென்ற பனுவல் கூற வேல்வர் காப்புத் தானே. (2)

மேல்வட்ட மிட்ட கோந்தி மெய்ப்பதி யாண்ட ராசன்
பூவட்ட லோகம் விட்டு பொன்னுல காள வென்று
சேல்வட்ட மிட்ட வல்லி செங்கையில் சிக்கிக் கொண்டு
கால்வட்ட மிட்ட ஞானக் கருவுக்குள் களிறு காப்பாம். (3)

பாயிரமுற்றும்.

## நூல்.

வண்மையா யுலகை யாண்டு வாழ்ந்துதான் கோந்தி மன்னன்
உண்மையாம் நூல்கள் பார்த்து உறுபொரு ளிதுவே யென்று
நன்மையாம் பதத்திற் சேர்ந்து ஞானமாம் பதியி லேறி
தண்மையாய் வல்லி யாலே தான்மதி கெட்டுள் ளானன். (1)

மதிகெட்டு புத்தி கெட்டு வாழ்நகர் தன்னை விட்டு
பதிகெட்டு சதாசி வத்தின் பட்டணந் தன்னில் வந்து
விதிகெட்டு லச்சை கெட்டு மெய்ஞ்ஞானத் தாடிப் பாடி
நதிகெட்டு பூசை விட்டு நற்சடை யாண்டி யானன். (2)

ஆண்டியாய் மதிதான் கெட்டு அநேகமாம் பொருள்கள் தோறறு
வேண்டிய தேசத் துக்கு மெச்சு மந்திரியை வைத்து
தாண்டியப் பதியை விட்டு சச்சிதா னந்த வல்லி
யூன்றிய வாசை யாலே உலகெலாஞ் சுற்றி னானே. (3)

சுத்தினன் வல்லியாசை தொட்டவா விட்டதில்லை
பத்தினன் சிநேகிதன்மேல் பட்சமும் விட்டுவிட்டு
வத்தினன் சடம்வேறாகி மதிகெட்டு சபையுள்வந்து
கத்தினன் கிடந்தான் மூச்சைக் கால்கொண்டு வாங்கினனே. (4)

### வெண்பா.

வாங்கினன் பிச்சை மதிகெட்டு வல்லியினல்
தூங்கின னிச்சபையிற் தோன்றின—னேங்கினன்
உட்டமைய மாறுக் குறுதியென மகிழ்ந்து
நற்சபையோர் கேட்பார் நயந்து. (5)

### கொச்சகம்.

நயந்த சபைநடுவே நற்சடையும் பொற்கணமு
முயர்ந்ததலை யோடுவைத்து உறங்குகின்ற பித்தா நீ
துயர்ந்து வாம்பருதி வைகுறு வாமதிபோ
லயர்ந்து கிடக்குறு யாரடா பத்தா நீ. (6)

### விருத்தம்.

பத்தனே சித்தன் றனே பரிவுள்ள மனிதன் றனே
கத்(ந்)தனே கயிலை யானே கள்ளனே வண்டத் தானே
வெத்தனே விடக்கன் றனே விச்சபை தன்னில் வந்தாய்
பித்தனே பிறப்பி லானே பேயனே யகலப் போடா. (7)

பேரவென்ற சத்தங் கேட்டு பொருமியே கோந்தி மன்னன்
ஆ! வண்டந் தன்னைச் சுற்றி யனுத்துநா னிங்கே வந்து
மாவென்ற சபையிற் குள்ளே மடக்கினே னெழுப்பி னய்நீ
நாவென்ற தேசத் துள்ளே நான்வட திசையில் போறேன். (8)

பொன்னுடன் துயில் (கள்) கொண்டான் பொற்சபை தன்னுக் குள்ளே
யென்னடா விங்கு வந்தா யிவிடத்தி லிருக்க வேண்டாம்
தன்னடா படுத்தாய் இந்த தலத்தைவிட் டெழுந்து போபோ
வென்னடா போடா வாடா வென்றவ னெழுப்பி விட்டான். (9)

போனவன் கிழக்கே வந்தான் போதக வல்லி தன்னை
தானவன் தேடி வாடி தன்னுக்குள் சலித்து மன்னன்
ஆனவ னிவனே யானல் அடித்தெனை யெழுப்ப லாகா
வானவன் சபையிற் குள்ளே வந்தவன் மடக்கி னனே. (10)

மடக்கினய் பித்தா நீதான் மதிகெட்டுப் போன யோடு
ஒடைக்குறேன் அடிக்கு றேன்பார் ஒருசொல்லும் போதா தோடா
அடக்கினன் போகச் சொல்ல ஆரடா திரும்பி வந்து
முடக்கினய் சபையி னுள்ளே முனிவர்க ளடிப்பார் போடா. (11)

முனிவர்க ளடிப்பாரென்று மூர்க்கமாய் சொன்ன யண்ணே
பனிகுளிர் காற்றுவீசப் படுத்துநான் கிடக்கும் போது
கனிவுறு தீபுறமாய்க் கடுகவந் தெழுப்பி னய்நீ
யினிவராய் தெக்ஷிண்ய மென்றவன் படுத்தா னன்றே. (12)

படுத்தவன் கிடக்கும்போது பார்த்தந்த சபையுள் ளோர்கள்
கடுத்திவன் முகத்தை நோக்கிக் கரிமுண்டம் போல நீதா
னுடுத்த தெண்டோடு கந்தை உலகெலாஞ் சுற்றிவந்து
படுத்தவ னுரடாயிப் பதியைவிட் டகலப் போடா. (13)

போமென்று லகலப் போமோ பெருமையவ் வல்லி யாலே
தாமண்டஞ் சுற்றி யோடித் தவித்துநான் கிடக்கச் செய்தே
வாமென்ற தூபங் கொண்டு வந்தெனை யெழுப்பி னுய்நீ
வோமண்ட நிற்க மேற்கே ஒளித்துநான் போறே னண்ணே. (14)

போனவன் படுத்தான் மேற்கே புதுமைகள் மெத்தக் கண்டு
தானவன் மயங்கி வாடி தலைதனி லோட்டை வைத்து
வானவன் தூங்கும் போது மதிமுகத் தூரியா தீதக்
கானவன் போற்றும் வல்லிக் கருணையால் கணுக்கண் டானே. (15)

கண்டவன் கிடக்கும் போது கனகநற் சபையோர் பார்த்து
நின்றிவன் திசைகள் நான்கும் நிலவரம் படுத்தா னென்ன
கொண்டுவந் திருக்கு [கி] றுனே குளிர்மதி கெட்ட பேயன்
யென்றவன் தன்னைத் தட்டி யெழுப்பினு ரெழுப்பி னுரே. (16)

**கொச்சகம்**

சத்தரிஷி போற்றுஞ் சதாசிவனு ராடுகின்ற
சுத்தவெளியிற் சபையிற் றூங்குகின்ற பித்தாநீ
சித்தர் வரப்போரார் சேவிப்பார் அரைச்சணத்தில்
நித்தம் பரிசுத்தவரை நில்லென் றெழுப்பிவிட்டார். (17)

மட்டாரும் பூங்கூந்தல் வல்லியைநான் காணுமல்
வெட்டாத தவ்வெளியில் விழிதுயின்றே னிங்குவந்து
ஒட்டார மாக வுருக்கியெனை யுதைக்க
விட்டகுறை யோசிவன்றன் மீண்டு மெழுப்பினேயே. (18)

## தரு.

**(சிந்து.)**

இப்படி யெழுப்பலாமோ யென்நித்திரையை
இப்படி யெழுப்பலாமோ
பொற்படிகை தூக்கமுறை முற்படியில் காணுமல்நின்று
னப்படிகள் போடச் சொல்லே—இப்படி. (19)

சித்தர் பதஞ்சலி வாழ்த்துஞ் சிதம்பர வல்லியுடன்
சுத்த சைதன்னியத்தை தூக்கமுற்று உற்றபதம் போற்றை
யிலே—இப்படி. (20)

அன்னநடைக் கிள்ளைமொழி யானந்த வல்லியிடை
பின்னதூடே சுழியோக மின்னபடி யெனச்சொல்லே—இப்படி. (21)

அச்சமில்லை வல்லிபதம் நிச்சயமாய் போற்றுமென்று
மச்சமுனி சொல்லைக்கேட்டு மெச்சிமனந் தூங்கையிலே—இப்படி. (22)

வெற்றிகுரு மூலமாதி சததிசிவ மானசோதி
புத்தியறி வானிலோடி சுத்தியாடி வருகையிலே—இப்படி. (23)

அன்பத்தோ ரட்சாமு முன்பத்தா லேயெடுத்து
முன்பத்தா ரீகையிலே கன்பத்தா ரிச்சனபயில்—இப்படி. (24)

வாரணந் துணைப்பெற்ற நாரண வல்லியுட
காரணத் தாலேபரி பூரண மானசொல்லே—இப்படி. (25)

கத்தறிவ தானவல்லி வித்தார மதானவல்லி
சித்தறிவ தானதெல்லா முத்த ராகையிலே—இப்படி. (26)

மதியால் விதியைவென்று நிதியான கனகவல்லி
பதிகா லுறங்கையிலே சதியாக வெணையும்வந்து
இப்படி யெழுப்பலாமோ. (27)

**கொச்சகம்.**

அத்தர் சதாசிவனு ராடுஞ் சபைதனிலே
பித்தர் சடைமுடியும் பிரம்போடுந் தானெடுத்து
நித்தம் பிதற்றுகிருய் நினைவு கனவாகச்
சுத்தமதி யத்தவத்தை தோன்றினதைச் சொல்லுமென்றார். (28)

**(சிந்து.)**

கனவுகண்டேனே அடண்ணே—என்
நினைவு கொண்டேனே
கனவு உருத்திரி சாக்கிதஞ் சொப்பனங்
காணுஞ் சுழித்திக் கரித்துரி யாதீதக்—கனவு கண்டேனே. (29)

தத்துவந் தொண்ணூற் றாறு மெனக்குத்
தானே திருத்தவுந் வானி விருத்தவும்
உத்தகை வல்லி புத்தி திருத்தி
உடலுக் குயிரை உறவா யிருத்தவும்—கனவு கண்டேனே. (30)

சாத்திர மாறுஞ் சலமென்று தள்ளவும்
தன்சரம தாக்கவும் பின்சரம தூக்கவும்
கோத்திரம் வாழ்வது கொண்டு நோக்கவுங்
குஞ்சரந் தன்னைக் கும்பிட்டு நிற்கவும்—கனவு கண்டேனே. (31)

நாலான வேத முலகத்தை யென்றும்
நாடாம லேமனங் கோடேறிக் கொண்டு
காலான வேத மெடுத்துளங் கண்டுங்
காரண சற்குரு பாதமிது வென்றும்—கனவு கண்டேனே. (32)

கும்பிட்டு நிற்கக் குருவந்து தூக்கக்
கூசாமலே மனம் பூஜை செபிக்க
அன்பிட்டு மூன்றெழுத் தாமென்று தாக்க
ஆனந்த வல்லிதா னென்பதுஞ் சேர்க்க—கனவு கண்டேனே. (33)

அஞ்சிலே மூன்றைக் கூட்டவும் நாட்டவும்
உள்ளூறு தலத்தி லேறவும் ஆறவும்
நெஞ்சிலே அன்பத்தோ ரட்சரங் கீறவும்
நேர்சுழி யாமமு தூறலை யுண்ணவும்—கனவு கண்டேனே. (34)

அக்கினி ஆதித்தன் சந்திர னாகவும்
ஆயிரத் தெட்டித ழாக விரியவும்
திக்கினி லெட்டுச் சரஞ்சத்தி யாகவும்
சிதம்பர வல்லிதான் சிங்கத்தி லேறவும்—கனவு கண்டேனே. (35)

சிங்க மகமென்ற ராசியில் கூறவும்
தேன்மொழி வல்லி சிவத்தின்மே லேறவும்
பங்கமில் லாதவன் சிவந்தவம் தேறவும்
பார்த்த வனமக்கள் முகம்வேற தாகவும்—கனவு கண்டேனே. (36)

அறுபத்து நாலு மடபதிக்கும் பிள்ளை
யாமென்று வல்லி யுவர்கைக் கொடுக்கவும்
மறுவற்ற சோதி நவகோடி சித்திரம்
மவுன சிவயோக வாழ்க்கை யதாகவும்—கனவு கண்டேனே (37)

### கலிப்பா.

கனவு துரியமதில் கண்டோ மெனமகிழ்ந்து
நினைவு தரியாமல் நீசபையைச் சுற்றிவந்தாய்
உணர்வு தெரிசனத்தில் உற்பனம்போல் கண்டக்கால்
புணர்வு பணிசெய்யப் போகுமோ பேயாபோ. (38)

### வெண்பா.

தரப்படியே வேகாத தலையை யறிந்துணர்ந்து
கரப்படிசா காக்காலை கருதினால்—அப்படியே
போகாதோ வல்லி புதுமையிலை யோவிதுபொன்
னாகாதோ பேயாக்கி னாய். (39)

(சிந்து.)

நானடா பேயன் அடண்ணே நானடாப் பித்தன்
மானிட வாழ்க்கை யெடுத்து சிவத்தை
வணங்க அறியாத மான்பரல்லோ பேயன்—நானடா. (40)

கோத்திரம் வாழக் குருபதந் தன்னை
கும்பிட்டுப் பூஜைகள் அன்பிட்டுச் செய்யாமல்
சாத்திரங் கற்றும் அரிசிவன் வேறென்று
சண்டாள மூதேவி தானல்லவோ பேயன்—நானடா. (41)

தந்தை யன்னைசுற்றந் தாய்பெண்டு பிள்ளைச்
சதமா நமக்கென்று தன்னை யறியாமல்
விந்தை சமையத்தோர் வாய்ஞானங் கற்று
வீராகப் பேசிய தாருமல்லோ பேயன்—நானடா. (42)

தன்னுசிக் குள்ளே சிவசிவ மானது
தானுட மாட்டாமல் மானிடர்க் கூட்டஞ்
சன்னுசி யென்றுங் கிரிசுத்திக் கோவில்
தானுடிப் பாடித் தவஞ்செய்பவன் பேயன்—நானடா. (43)

கல்லைப் பிளந்து சிறுசிலை யாக்கி
கண்ணுள் வைப்பதைக் கண்டு மிருந்து
மெல்லைப் பிடாரி யிதுசிவ லிங்கமென்
றேத்திப் பணியு மிடும்பரல்லோ பேயன்—நானடா. (44)

பொங்க விட்டுப் பொ[ப]லிகொண்டு பெரும்பூஜை
போட்டுக் கொடுக்கக் காட்டுப் பிசாசுக்கள்
ஓங்க விட்டுத் தலைசுத்திச் சிலபேர்
ஓடிப்பணிய ஆடித்திரி கின்றவன் பேயன்—நானடா. (45)

கத்தமா தேசு சறுவேசு பரன்றன்னைக்
கட்டி யடிக்கையில் கண்டவர் போலவே
சுத்தப் பயித்தியக் காரர் கையால்மண்
துழாவி யழுதுத் தொழுகின்ற வன்பேயன்—நானடா. (46)

இல்லல்லா வென்று யீமர் உளங்கொண்டு
இருத்தி வல்லோனை யிணையடி போற்றிச்
சொல்லல்லா வென்று தொழாமலே லப்பைத்
தொழிற்செய்துக் கோழி யறுப்பவன் பேயன்—நானடா. (47)

பாத்திப லிங்கத்தை யேத்தி மணிப்பூஜை
பண்ணுமல் வீணர் பலபல பூவைச்
சாத்திமண் லிங்கத்தைப் போற்றி எடுத்துப்பின்
தண்ணியில் போடுந் தவகாசி பேயன்—நானடா. (48)

வாசியி லேதினம் வாழ்ந்தோமென் றேசொல்லி
வையகத் தோரை மயக்கித் தியக்கி
தேசியி லேற வகையறி யாமலே
சீடர்க் குபதேசம் செப்புவன் பேயன்—நானடா. (49)

கவுத்து மாக உலகத்தில் பேசிக்
காயக் கனியாம் மதுபானம், அருந்தி
மவுத்துவ மாகக் கவுத்தினில் தூங்கி
வரிகண்ட தாகத் திரிகின்ற வன்பேயன்—நானடா. (50)

பெண்ணுக்குள் ளாணும் பிறந்த தறியாத
பித்த னிவனொரு சித்தனு மென்றும்
மண்ணுக்குள் ளேபெருச் சாளி யெலிசுண்டன்
வாழ்ந்தது போல்குழி பூந்தவன் பேயன்—நானடா. (51)

செய்யும் புகழ்வல்லி சிற்பரர் பாதத்தைச்
சேர்ந்தே புகழ்ந்தேத்தி வாழ்ந்தே யிருக்காமல்
உய்யவே காசி தனுக்கோடி தேடி
ஓடியே தீர்த்தங்க ளாடினவன் பேயன்—நானடா. (52)

மானிசத் தோடே மனையி லிருந்து
வடிவுள்ள கன்னியை மந்தையிலே விட்டுத்
தானிச மென்று தலைசுத்தி யாடியே
தன்மா னிங்கெட்டுத் தான்போன வன்பேயன்—நானடா. (53)

### கொச்சகம்.

பேயாவென் றேயொருசொல் பேசினதே தப்பிதமா
மோயாமல் நீதான் உலகந் தனைப்பழித்தால்
காயமோ பிஞ்சுகனி யாகாதோ விப்புவியில்
நாயமோ ஏசுவது நல்லதல்ல பாவமடா. (54)

பாபமிது வல்லாப் பகர்வே னொருமொழிநான்
சாபமது முன்னோர்கள் தான்கொடுத்தா ராகையினால்
கோபமிது பொய்யுங் கொலைகளவுந் தானாக
சோபமிகச் செய்யுந் தொழிலால் வரும்பாவம். (55)

### தரு.

பாவமிது வல்லவோ—அடண்ணே
பாவமிது வல்லவோ
பாவ மிதுவோ அரிகுரு வாகிய
பஞ்சாட் சரத்தைப் பகுத்தறி யாமலே
கோப மிதுகலி காலத்தி லேவஞ்சக்
குருவென்று சொல்லித் திரிவது மெத்த–பாவமிது வல்லவோ. (56)

தன்னை யறிந்து தவசியென் றேபெண்ணை
தான்விட்டுப் போட்டுத் தலங்களைச் சுற்றியே
பின்னை யிரவில் கனக்கண்டு மோக
போகத்தைத் தாகத்தை யாகத்துள் வைப்பதும்—பாவமிது வல்
[லவோ. (57)

நம்பின பேருக் கிரண்டு நினைப்பதும்
நானிலத் தோர்செய்த நன்றி மறப்பதும்
வெம்பிய கோபத்தில் பொய்கொலை செய்வதும்
விரும்பிக் களவில் வருந்தித் திரிவதும்—பாவமிதுவல்லவோ (58)

ஆசானைச் சீடன் அடுத்து அவருக்குள்
ஆயமான சத்தை யவன்கற்றுக் கொண்டுபின்
தூஷணை பண்ணி யவருக்கு வஞ்சகம்
சொல்லுவது மாசைக் கொள்ளுவது மெத்தப்—பாவமிது
[வல்லவோ. (59)

மானிடத் தோர்கள் மட்பதிக் குள்ளே
வைத்துக் குருவை வணங்க அவரவர்
தானிட மாகவெகு போதுள வாங்கியுந்
தன்மத்ததை செய்யாமல் தான்பட்டிக் கீய்வதும்—பாவமி துவல்
[லவோ. (60)

முன்னோர் தருமங்கள் செய்து துலங்கிட
மூட ரதுக்கிணை யாடவுந் தாங்களும்
பின்னோர் தருமத்தை யுண்டாக்கியே யிரண்டு
பேருஞ்சொல் லாமலே சீரு குலைவதும்—பாவமிதுவல்லவோ. (61)

அந்தத்துக் குச்சற்று மாகாத பேர்தனை
ஆயன் பிடித்துத் தலையைச் சிரைத்தொரு
பந்தத்தைக் கொண்டு பொசிக்கிப்பின் முத்திரை
பாத்திடு சாமத்தைச் சேத்தி யடிப்பதும்—பாவமிதுவல்லவோ. (62)

ஆண்ட குருவை சிவனை யறியாதார்
ஆமென்று துர்க்கைத் தன்பூசைக் கிசைந்துமென்
பூண்ட விதியினைப் பயனுத்துப் பாரு
புலையர் செடிலாட்டம் போட்டுத் திரிவதும்—பாவமிதுவல்லவோ. (63)

வாலசன் ஞசமென் றேயுல கெங்கும்
மயக்கித் தியக்கி பணத்தைப் பறித்தவன்
சாலப் பரத்தையர்க் கீய்ந்து மகேந்திரந்
த்ம்பித்து நல்லோர்போல் பாவித் திருப்பதும்—பாவமிதுவல்லவோ.
(64)

மந்திரம் பில்லி கோடி யேவல் கற்றுமே
மானிடத் தோரை மறுபடி பிணத்தோரும்
இந்திரன் வானவர் தேவர்மே லாணைகள்
இட்டேவல் கொண்டு யிருப்பதுவு மெத்தப்-பாவமிது வல்லவோ. (65)

நாடித் தலங்களி லோடித் திரிந்தோரும்
நன்ருகச் சேவித்து முண்டகத் தாள்பிற்
கூடிச் சனங்கள் நடந்துக் கைப்பற்றிக்
கொண்டு தெருவில் குளிரில் கிடப்பதும்—பாவமிது வல்லவோ. **(66)**

மண்ணில் போதந்து வளிக்கோத மாகியும்
மாதா பிதாகுரு வாக்கியந் தப்பியுஞ்
சண்டிக் குணம்புத்தி யால்பல செந்துவைத்
தண்ணீர்க் குடியில் சதிகுலை செய்வதும்—பாவமிதுவல்லவோ. (67)

**கலிப்பா.**

குற்றமற்ற சித்தரெல்லாங் கூடுஞ் சபைதனிலே
பத்தர்நித் தஞ்செய்யும் பாவம் பகுத்துரைத்தாம்
வித்தகத்தி லுற்ற பிரம்மா அவரவர்க்கு
உற்றவித்தை தான் கொடுத்து ஊன்றினதும் பொய்யாமோ. **(68)**

ஊன்றினதும் பொய்யல்லகாண் உற்றவல்லி யாலயனுந்
தோன்றினபேர் தன்னைபிதா துன்பவின்பத் தாலழிவு
வேண்டி யுருவெடுத்தோம் விதியென்பார் காணுமல்
தான்றியுயிர் நன்மைதன்மை தந்தைவிந்து முந்தினதே. (69)

**சிந்து.**

தந்தை மதியல்லவோ அடண்ணே
இந்த விதிகளெல்லாம்
தந்தை மதிகொண்டு வந்த வழிசென்று
தாலத் தொருமுதை பாவித் தொருவினை
எந்த விதிக ளருத்தம தாகவே
எடுத்துச் செடத்தைக் கொடுத்தது முன்னே—தந்தை மதி
[யல்லவோ. **(70)**

முந்தி அரவம் பிடித்து னடித்துமெய்
மூலத்தைப் பற்றிய காலத்தி லேமனம்
விந்தை கலவிகள் செய்கையி லாண்பெண்
விதித்த தளவுக் குதிக்கு மழிவுகள்—தந்தை மதி (71)

தருமத்தைச் செய்வதுந் தான்புவி யாள்வதுந்
தாண்டிப் பணிந்தவன் தன்னைச் சுமப்பதும்
வருமத்தைச் செய்வதும் வனகூலை மாள்வதும்
வந்தபேர்க் கன்னம் வழங்கா திருப்பதும்-தந்தைமதி. (72)

பெண்ணுட ஞணுப் பிறப்பது மற்ற
பேதக வாழ்வை நினைப்பதும் சுத்த
விண்ணுட னேழுப் பிறப்புமே யுற்ற
விந்து வழியில் விளைந்திடுங் குற்றமும்—தந்தைமதி. **(73)**

ஆதித் தவத்தை நினைக்க அவன்சிவ
ஞுகவும் வல்லோரா யாடித் திரியவும்
போகிக் குணம்வந் துதிக்கு மதுமுன்னே
பேடென் சாவல் பிறந்து விறந்ததும்—தந்தைமதி. (74)

அன்னை வயிற்றில் பிறந்திடும் பிள்ளை
அநேகங் குணங்க ளாகப் பிறந்து
பின்னைத் தவமும் நெறியு மறிவுமாய்
பின்னொரு பிள்ளைப் பெரும்பாவஞ் செய்வதும்—தந்தைமதி. (75)

யோகிக ளாவதும் போகிக ளாவதும்
உற்றநிதி யமுதுண்டு சித்த ராவதுந்
தேகிக ளாவதுந் தேவர்க ளாவதுஞ்
சித்தமதில் பிறந்து உத்தம ஞவதும்—தந்தைமதி. (76)

தேசத்தி லோடித் திரிவார் சிலபேர்
சிந்தை வலிகொண் டிருப்பார் சிலபேர்
பாசத்தி லோடி யழியுஞ் சிலபேர்
பாதக வித்தைகள் பண்ணுஞ் சிலபேர்—தந்தைமதி. (77)

மூன்ருசை கொண்டு முயங்கித் திரிவதும்
முன்னேவல் கேட்டவன் பின்னவன் வாழ்வதும்
மூன்ருசை கொண்டு தவஞ்செய்வோ மென்பதும்
புண்ணிய பாவம் போதுள மறியாததும்—தந்தைமதி. (78)

ஞாயத்தைப் புத்தியி ஞலே யறிவதும்
நல்லோர் பெரியோர்கள் பாதம் பணிவதும்
காயத்தை சித்திய தாக்கவும் மோட்சக்
கருவை யறிந்து குருவா யிருப்பதும்—தந்தைமதி. (79)

பாக்கியவா னென்றும் நோக்கிய வார்த்தையும்
பாவிகள் வண்டாப் பரிசாப மென்றுந்
தாக்கிய வண்மை பொறுமை பலபேய்கள்
தாயார் கருவில் தரிக்கவும் வைத்தது—தந்தைமதி. (80)

சாத்திரம் பார்ப்பதும் சந்நியாசி யாவதும்
தன்னுக்குள் தானே தவத்தை யறிவதும்
கோத்திரம் எங்கும் விளங்க அவனிகைக்
கொள்கையு ளன்னங் கொடுக்க நினைப்பதும்—தந்தைமதி (81)

**கொச்சகம்.**

தந்தைமதி கொண்டுடலைத் தாமெடுத்தோ மென்றுசொல்லி
விந்தைமதி யுரைத்தாய் மெய்ஞ்ஞானிகள் போலே
கந்தைப் பிரம்போடு காதில்திரு மேனியிட்டு
மந்தைதனில் வந்தவகை வாறெனக்குச் சொல்வாயே. (82)

சொன்னே னவரவர்கள் தோன்றினதெல் லாமறிய
பின்னே திருமேனி பிரம்போடு மேதெனவே
முன்னே நீகேட்டாய் மூலவல்லி தான்கொடுக்க
அன்னேநான் வாங்கிவந்த தறியா திருத்தியளோ. (83)

### வெண்பா.

அறியா தவர்களுக் கானு லுரைக்கிறேன்
குறியாய் கருவுதித்தக் கூத்துபோல்—நெறியாய்
வல்லியெனக் கேகொடுத்தாள் வாய்த்த திரு வோடுவகை
சொல்லிவிடு மென்றே துணிவு. (84)

### தரு.

ஆதிகுருவோடு அடண்ணே ஆனந்த வாழ்வோடு
ஆதிகுருவோடு அடண்ணே வல்லத் திருவோடிதுவே. (85)

சாதித் தவிழ்ந்தோடு அடண்ணே தான்பலி கொண்டோடு
சோதிமணியோடு அடண்ணே சொல்லுந் திருவோடிதே. (86)

ஆதி சிவனோடு அடண்ணே அன்னை தாலத்தோடு
ஓதி யுணர்ந்தோடு அடண்ணே உற்றகை சித்தோடிதே. (87)

வேதன் தலையோடு அடண்ணே விண்டரி தன்னோடு
மாதவ ரும்திரன்தான் கொடுத்தவல்லி திருவோடிதே. (88)

### விருத்தம்.

மிச்சமாய் சிவனையென்று மெல்லடி பணிவோ ரெல்லாம்
உச்சமாம் நதியில் மூழ்கி ஊர்தனில் பிச்சைவாங்க
அச்சமொன் றில்லை யென்று ஆனந்தவல்லி மெச்சி
பட்சமே வைத்துத் தந்தாள் பாழ்வெளி ஞான வோடே. (89)

### கொச்சகம்.

ஓட்டுநிலை யெங்களுக்கு உச்சிதமாய் சொன்னதினுல்
வாட்டந் தவிர்ந்தோம் மனமகிழ்ச்சி யானேங்காண்
நாட்டந் துணிபிரம்பு நல்லதிரு மேனிசித்தர்
கூட்டந் தரிக்கும்வகை கூறுவாய் கோமுனியே. (90)

### தரு.

வையம் புகழ்ந்தேத்தும் அடண்ணே
மாணிக்கவல்லி தந்த
வெய்ய மனத்துணிவாய் அடண்ணே
விதித்த கலையிதுவே. (91)

எட்டெட்டு வான்கலையும் அடண்ணே
யீராறு நாற்கலையும்
மட்டிட்டு ஓர்கலையாய் அடண்ணே
வாங்குந் துணியிதுவே. (92)

மூல முடியுந்துணி யடண்ணே
முச்சந்தி தன்னில்வெகு
காலங் கிடந்ததுணி வல்லி
கட்டுந் துணியிதடா. (93)

கன்னி புருவவல்லி யடண்ணே
கட்டுங் கலையதனை
உன்னி யவள்கொடுக்க அடண்ணே
உடுத்தினுன் கொண்டேனடா. (94)

## கலிப்பா.

உடுத்த பழந்துணியை ஓதுகலை யாமிதென்றுய்
கொடுத்தவரா ரென்றக்கால் கோதைவல்லி யென்றுரைத்தாய்
அடுத்துவந் தாருக்கு ஆசான்பொன் ஞகையிலே
யெடுத்ததொரு மாத்திரைக்கோல் இப்பிரம்பு யீந்தவரார். (95)

## தரு.

நந்திக் குடைப்பிள்ளை யண்ணே
நாதன் திருமூலர்
நந்திக்கும் பிள்ளைவல்லி அடண்ணே
சதாசிவ னீந்தாண்டா. (96)

அண்டர் புகழ்ந்தேத்தும் அடண்ணே
ஆனந்த வல்லியுட
தொண்டர்க ளாங்கூடி யடண்ணே
தொட்டுக் கொடுத்ததடா. (97)

நாகமணிப் பிரம்பு அடண்ணே
நாட்டின மாத்திரைக்கோல்
யோகமணி வல்லிதா னடண்ணே
ஓதிக் கொடுத்ததடா. (98)

சுத்தவெளி யோனியில் அடண்ணே
தோன்றிச்செவ் வாசியென்ப
பெத்தனெம் மாத்திரைக்கோல் அடண்ணே
பேசிக்கொடுத் தாள்வல்லி, (99)

### கலிப்பா.

அட்டாங்க மெட்டும் அரிபுருவ வீடுமட்டு
மொட்டாங்கால் தினந்தோறு ஓங்கார வாசல்மட்டும்
எட்டாக் கடுவெளியில் எவ்வுயிர்க்குந் தானுகத்
தொட்டாடும் வல்லிதந்த தோகைமலைப் பிரம்பே. (100)

பேய்போலே வந்தாய் பெரிதான வார்த்தைசொல்லும்
வாய்போல் நாங்களிந்த வையகத்தில் கண்டதில்லை
தாய்போல் வல்லிதனைத் தாள்பணியும் மாமுனியே
நாய்போல் சுருண்டகுழை நல்லதிரு மேனிசொல்வாய். (101)

### தரு.

ஆரூர் பிறந்தவழி யடண்ணே
ஐய்யூறுந் தட்டாண்டா
பாருருவால் சமைத்த அடண்ணே
பசும்பொன் திருமேனி. (102)

செக்கச் சிவந்ததடா அடண்ணே
தீய்ப்போலே மேனியடா
தக்கச் சமைந்துவல்லி யடண்ணே
தன்கைக் கொடுத்ததடா. (103)

நால்வேதம் வேண்டார்கள் அடண்ணே
நடுநிலே யொன்றுக்கால்
கால்பேதம் இரண்டிடைபின் னடண்ணே
கம்பிக்குள் ஸ்த்தம்பியடா. (104)

தம்பித்து ஒன்றுக்கி யடண்ணே
தான்திரு மேனியடா
நண்புற்ற அன்புவல்லி யடண்ணே
நற்குழை யிட்டானடா. (105)

### வெண்பா.

இட்டாள் திருமேனி யேகாந்த வல்லிதன்சொல்
தட்டான் கொடுத்ததெனச் சாத்தனுய்—வட்டத்
திருநீறு இட்டவிருஞ் செப்புவாய் நாங்கள்
வருநூறு கோடியுனே வாழ்த்த. (106)

### கொச்சகம்.

வாழ்த்து மனிதருக்காய் மாதுமையாள் பங்கனன்று
மாத்தும் பிறவி மயக்கறுக்கு மஞ்செழுத்தை
ஏத்துவுரு நூராறு எட்டிரெண்டும் பற்றுகச்
சாத்துமென்று யீசன்வல்லி தரித்ததிரு நீறிதுவே. (107)

**விருத்தம்.**

ஒட்டிநீ வந்தாய் நல்ல உத்தமர் சபையினுக்குள்
தட்டிநான் எழுப்ப யுந் தானெனக் கழிவுசொன்னாய்
பட்டிநீ பசுவைக் கட்டிப் பனித்துளி பிறந்திடாமல்
கெட்டிநீ பணியும் வல்லி கிருபைகொண் டிருந்திடாயே. (108)

இருமென்று தேவரெல்லாம் ஈசனை ப் பூசை செய்ய
திருமண்டு தன்னில் மன்னன் சிவசிவா வென்றுவாங்கி
வருமென்று மதி[யைச்]சுத்தி வாழ்மனந் தன்னைத் தாக்கி
தருமென்றே பொறியை நோக்கி தானவ னேதுசொல்வான். (109)

**தரு.**

நாவே அரிகுருபாவே யிசைந்தோது மென்னாவே
இனிருசிப் பாவே யிருமுனைப் பூவே
துதிசிவ மாவே யென்னுட நாவே. (110)

நான்முகன் தாள்துதி யொளியாதே—நல்ல
சிவசிவ யோகியைப் பழியாதே
கரமுக விரகமழியாதே—யுண்ணக்
கருவாய் ருசிபார்த்துக் களியாதே—என்னாவே. (111)

சரசோதி யுன்னிடத் திருந்தாளே—யந்த
தாய்மணி முத்தமிழ் சொரிந்தாளே
பரசோதி ரூபம் பிறந்தாளே—கலை
பரத்தினித் துதிசிவன் தருந்தாளே—என்னாவே. (112)

அறுசுவைக ளட்டிக் கொடுக்காதே—யிது
வாமென்று ருசிபாத் தெடுக்காதே
மறுசமை யோரோடு ஒழுகாதே—சிவ
வாக்கியந் தொடுத்தால் விடுகாதே—என்னாவே. (113)

வம்பருட னென்றுஞ் சொல்லாதே—பொய்
வார்த்தைக ளொன்றுங் கல்லாதே
ரொம்ப விதமொழி கும்பாதே—வல்லி
நேர்திருத் தாளுண்டு செப்பாதே—யென்னாவே. (114)

**வெண்பா.**

நாவுக்குப் புத்திசொல்லி நல்லமதி யுள்ளமன்னன்
பாவுக்குள் வல்லிபதம் போற்றிக்—காவுக்குள்
பூமலர்ந்தா ளமைய்யப் புதுமையிது வோகண்ணி
ணேமலர்ந்தாள் கண்டா யொளி. (115)

**தரு.**

கண்ணே செவிமூக்கே மனமதுகா ணழிவாய் நில்லு மனமே
பெண்ணினையென்றும் நினையாதே மனக்கண் போடாதே செவி
[கேளாதே—யென்கண்ணே. (116)

ஓடிநீ மனமே உலையாதே—செவி
யோடுற வாகி யலையாதே
மூடிநீ கண்ணை முழியாதே—சுழி
மூக்கோ வாசத்தை நோக்காதே—யென்கண்ணே. (117)

மனமேநீ வேருய்த் திரியாதே—பொல்லா
வார்த்தையைச் செவியுள் தரியாதே
கணமென் மாயக்கண் விரியாதே—மூக்கொரு
காலத்தி லேகெந்தந் தரியாதே—என்கண்ணே. (118)

கண்ணு ரு வாச மூக்கழியும்—மனம்
கண்டது செவிசத்தம் கோள்கழியும்
ஒண்ணுரு வாகத் தாக்கிழியுங்—கண்டோ
மென்று வல்லியைப் பார்க்கழியும்—என்கண்ணே செவிமூக்கே. (119)

**கலிப்பா.**

சத்த பரிசாச தானரூப கெந்தமைந்துஞ்
சுத்த பரிசனமாய் தோன்றினதைப் பார்த்து
சித்தர் பரியாடச் சிவாயநமா வென்றேத்தி
உத்தயதி காமலையை உருவேத்தி யேதுதித்தான். (120)

**(தரு)**

அஞ்சு குறிப்பறியும் வெண்ணிலாவே—சுழி
ஆகையிலே சிக்கினேனே வெண்ணிலாவே
நெஞ்சு ருலையறிவாய் வெண்ணிலாவே—சுழி
நோதலை காலறிவாய் வெண்ணிலாவே. (121)

மிஞ்சு புகழ்படைத்தாய் வெண்ணிலாவே—உன்னை
விரும்பி வருந்தினேனே வெண்ணிலாவே
கொஞ்சு கிளிமொழியாள் வெண்ணிலாவே—யெங்கள்
கோதவல்லி தான்தரித்த வெண்ணிலாவே. (122)

பெண்ணாய் கலைப்பிரிந்து வெண்ணிலாவே—நீ
பிஞ்சுயிளம் பிறையாளுய் வெண்ணிலாவே
ஒண்ணாகக் கூட்டுவாயோ வெண்ணிலாவே—உனக்
குள்ளதிது வேச்சல்லவோ வெண்ணிலாவே. (123)

இடக்கண் வலக்கண்ணுன வெண்ணிலாவே—வல்லி
எந்தன்முனே வாராளோ வெண்ணிலாவே
ஒடுக்க நிலையறிவாய் வெண்ணிலாவே—கண்ட
உற்பன மிதாமல்லோ வெண்ணிலாவே. (124)

விண்ணாகப் போகலாமோ வெண்ணிலாவே—வல்லி
வீட்டிலுன்னைத் தேடாளோ வெண்ணிலாவே
கண்ணுக்கு செவிமூக்கு வெண்ணிலாவே—வாய்
கண்டுசொன்ன வாறேது வெண்ணிலாவே. (125)

உன்னைமதி யென்றிருந்தேன் வெண்ணிலாவே—வல்லி
உற்றபிறை யாய்த்தரித்தாள் வெண்ணிலாவே
என்னைமதி கெட்டாளென்று வெண்ணிலாவே—லோக
மிச்சையிலேசுழுர்காண் வெண்ணிலாவே. (126)

மின்னல்விழி குளிரும் வெண்ணிலாவே—வல்லி
வீற்றிருப்ப தெவ்விடஞ்சொல் வெண்ணிலாவே
கண்ணே மணிபுனைந்த வெண்ணிலாவே—வல்லிக்
கமலப்பதத் தில்நிற்கும் வெண்ணிலாவே. (127)

சந்திரனும் சூரியனும் வெண்ணிலாவே—நீர்
தாமிருவர் ஒன்றல்லவோ வெண்ணிலாவே
தந்திரம தாகவேதான் வெண்ணிலாவே—இரவி
தன்னுக்குட் பாய்ந்தனையே வெண்ணிலாவே. (128)

மந்திரமுண் டோஉனக்கு வெண்ணிலாவே—கலை
மாறியுரு வேறினையே வெண்ணிலாவே
சிந்துரத்தின மேலெழுந்து வெண்ணிலாவே—மின்
சிவசிவ மாகினையே வெண்ணிலாவே. (129)

எந்தவகை யானுலு வெண்ணிலாவே—என்னை
யீடேற்ற வேணுங்காண் வெண்ணிலாவே
முந்த முயலகனை வெண்ணிலாவே—நீ
முற்றுமுயிர்க் காத்தனையே வெண்ணிலாவே. (130)

வந்தடைந்தே னுன்பதத்தில் வெண்ணிலாவே—வல்லி
வசமாகச் சேர்க்கவேணும் வெண்ணிலாவே
அந்தமாகி விந்துநாதம் வெண்ணிலாவே—பொரு
ளாக்கவல்லி நீயல்லவோ வெண்ணிலாவே. (131)

**வெண்பா.**

ஐம்பொறியோ வான்கதியோ ஐம்பூதக் கூட்டமதோ
கண்பொறியோ வல்லிக் கருணைதான்—என்பொறியில்
நின்ருட வேணு நினைவுக்கு எண்ணனுயிர்
கண்டாட வேணுமினி காண். (132)

**தரு.**

அண்ணன் வாரானே என்குரு அண்ணன் வாரானே
அண்ணன் வாரானே யின்னமுறை வல்லிதாக் கையைத்
தூக்கி நோக்குமெனச் சொல்லி—அண்ணன் வாரானே. (133)

அத்தி புரமுங் கோந்திமா தேசமும்
அல்லி நகரமும் பொன்னுமணிப் பெட்டையும்
சத்தி திருவணியர் முற்ற மான தீ
தன்னுட தீர்த்தமும் என்னுடல் காட்டின—அண்ணன் வாரானே.
(134)

முன்னும் பிறவி மயக்க மறுத்து
மூதுட லாக இப்போது உள்காட்டி
பின்னும் வரைதிங்க ளாரென மூட்டிப்
பெண்ணுருவ மன்றி பேதிக்கச் சொன்ன—அண்ணன் வாரானே. (135)

வேத முறைமூன் றுரையுங் கூட்டி
விண்ணுள்ள வாசல் வெளியொளி காட்டிப்
போத மதுவென் றேதயி லச்சிவன்
புகைச்சுத் தளித்த புண்ணிய வான்குரு—அண்ணன் வாரானே. (136)

அண்டர் வெளியில் சென்றேறு மென்று
ஆனந்த வல்லிக் கடுமைய தாக்கிக்
கொண்ட வளியிற் சுழியோக மென்று
கொடுத்தெந்த நாளும் தடுத்தென்னை யாட்கொண்ட—அண்ணன் வாரானே. (137)

**கொச்சகம்.**

மாய மறுக்க மயக்கமது தெளியக்
காய மிறுக்க கருவுரைத்த நாயகனுர்
நேயமறிந் தொன்றுய் நினதடிமை கொண்டவல்லி
நாயம்பார் பரிக்கநல்ல குருவண்ணன் வந்தான். (138)

**தரு.**

அண்ணன் வந்தானே பரிகுரு அண்ணன் வந்தானே
அண்ணன் வந்தான் அரிபுரு வந்தனி
லானந்த வல்லிதா ளாடினதும் பார்க்க—அண்ணன் வந்தானே. (139)

தத்துவம் விட்டுத் தானே உபநிஷந்
தாக்குமென் றேசொல்லி வாக்கிலே நின்று
மற்றும்பொருள் மெத்த உண்டான தெல்லாம்
வல்லி தருவாளென் றேசொல்லிப் போன—அண்ணன் வந்தானே. (140)

வாதமும் மற்ற சிலேத்துமந் தீரும்
வந்துதான் பிரம்ம வல்லியி னாலே
போதமு மமுதத்துக் காட்டுறே னென்ற
புண்ணிய வானு னென்னும் படிக்கு—அண்ணன் வந்தானே. (141)

மூலத்தில் மூளை முளைத்துப்பின் னும்
மூக்க வழுக்கி முடிச்சொன்று தோன்றிய
காலத்தி லேவந்து கைக்கனி தந்து
காரண வல்லி பதம்போற்று மென்ற—அண்ணன் வந்தானே. (142)

நாலான வேதமும் சாத்திர வித்தையும்
நன்றாய்த் தவிர்த்து மூன்றாக நின்று
காலான வேதத்தைப் பாரென்று வல்லி
கைக்கொடுப் பாளென்று மூக்கணிக்கச் சொன்ன—அண்ணன் வந்
தானே. (143)

**விருத்தம்**

வந்தனர் சபையை நாடி மணியிசம் வலமாய் சுத்தி
தந்தன வென்று பாடி தானனு வென்று கோடி
விந்தெனப் பிரிந்து கூடி விளையாடின போது கண்ட
அந்தணன் வந்தான் வந்தான் அல்லிமான் கரையை விட்டு. (144)

விட்டவன் கிட்ட வந்தான் மெய்யிவ னண்ண லென்று
வட்டமாய்ச் சுற்றி வந்து மலரடி பணியச் செய்தே
திட்டமாய் தீயார் சொல்லு தீண்டாதே மதிதான் மெத்தக்
கெட்டவன் மதியுள் ளான்போல் கிட்ட நீ வந்தாய் என்னே. (145)

வந்தவன் தன்னை நோக்கி வளர்மதி யுள்ளோன் சொல்வான்
முந்தனர்த் தேசங் கோந்தி முனிவரில் முன்னோன் பின்னோன்
அந்தநற் கமல வல்லி அழிவுள்ள நகரில் வந்து
விந்தெனைப் பிடித்த தாலே மேனிவே றானே னண்ணே. (146)

அண்ணனென் றுரைத்தாய் நீதான் ஆரடா அகலப் போடா
உன்னைநா னறியேன் முன்னே உறவெனக் கென்று சொன்னாய்
என்னைநீ கண்ட தெப்போ எவ்விட மிருந்தாய் சொல்லு
அண்ணேநான் கோந்தி தேசம் அல்லிமா நகரில் வாசம். (147)

**தரு.**

என்னை யறியாயோ அடண்ணே
என்னை யறியாயோ
அன்னை பிதாக்குரு உன்னை யல்லாது
ஆரெனக் குறுதுணை யாமடா அண்ணே—என்னை. (148)

ஆறு கோடித்தலம் கோந்திமா தேசம்
அல்லி நகர்க்கர சென்ன யிருக்கை
பேறு கலைத்தொழி லாமென்று சொல்லி
பேசிய சத்தி சதாசிவ நீயல்லோ—என்னை. (149)

வாலைப் பருவத்தில் பட்டாபி ஷேகம்
வஞ்சி மாத்தாண்டன் வைத்திடு மென்றே
மேலைத் தெருவிலே கூட்டிப்போய் என்னை
மெய்ஞ்ஞானங் காட்டி விளையாடச் சொன்னவன்—என்னை. (150)

பட்டத்து வான்பரி கட்டவிழ்த்துக் கொண்டு
பாய்ந்தோடக் காட்டிலே நான்தேடி வாட
ஒட்டத்த வாழ்வென்று காட்டி யெனக்கன்று
உண்மைகள் நாட்டிக் கொடுத்தவன் நீயல்லோ—என்னை. (151)

அதிகால சந்தோஷ மாக வெழுந்து
அஞ்சுகலை சுத்தி யாட்டிடும் வேளையில்
பதிகாலச் சக்கரமா மென்னும் என்றும்
பாத்திட்டுக் கைமுறை சேத்திட்டுத் தந்தவன்—என்னை. (152)

**கொச்சகம்.**

மன்னவனே தேசமதில் வாழுமென்று வைத்துவந்தேன்
இன்னவண்ண மானையோ இவ்வுருவோ நீயெடுத்தாய்
சொன்னவண்ண மெல்லாந் தோத்துமோ வின்னமுறை
என்னவண்ணம் நீநடந்தாய் இயல்பெனக்குச் சொல்லாயே. (153)

**வெண்பா.**

சொல்லென்று அண்ணல் தூண்டில் அவர்கேட்க
அல்லென்று பாவ மகற்றியே—நில்லென்று
ஆசை கோந்திதேசம் அல்லிநகரும் விடுத்து
பூசைசெய்தென் வல்லிபதம் போற்றி. (154)

**அகவல்.**

போற்றினேன் வல்லி பொற்பதந் தன்னை
தாற்றினன் பிறவி மயக்க மறுத்து
விட்டுநீ அன்று விளம்பு மொழிதனைத்
தொட்டுநான் சித்தர் துணையுண் டெனவே
திட்டமாய் இச்சடம் சித்திய தாக
வட்டமா மூலம் மனத்தினி லுன்னி
சொன்ன மொழிநிசம் தொல்லுல காள்வது
என்ன மொழியிது இயல்பல வென்று
அல்லி நகரில் அவரில் ஒருவன்
தல்லி மகண்டு தளசிங்கன் றன்னை
பட்டா பிஷேகம் பாலித்து வைத்து
ஒட்டாக நீயிவ் வுலகாளு மென்று
வைய்ய மயக்கம் மனதில் வராமலே
ஐயை மயக்கி அருள்பெற வேண்டி
வாசமா மென்றும் வாழ்நகர் விட்டு
தேசமே திரிந்து சிவனடி காண
ஆறு தலமு மரியமா னதிகளும்
தேறுகம லாலயஞ் சேர்வைகள் செய்து
அய்யூரில் சென்று அப்பதி தன்னில்

மெய்யூர் தீர்த்தம் மதிகொண்டு ஆடி
மூலமாங் கோவில் முப்பிற காரமும்
காலமே சுற்றிக் கனல்மணி வாசலில்
நீலமாங் கிரிதலை நினைவால் வணங்கி
கண்டு தொழுவது காரண மான
குண்டலி சபையைக் கும்பிட்டு மேலே
சென்றுபின் பூமகள் தெரிசனம் பார்க்க
அண்ணு மலையை யான்சென்று கண்டு
உண்ணு முலைக்கண்ணி ஊரதை நாடி
சங்கநதி பரம சுரசுவதி தீர்த்தமும்
கங்கையுஞ் சிங்கள கேரள தீர்த்தமும்
ஆடினுன் முகனை யடியிணை போற்றி
தேடி மலர்மகள் சேவடிப் பணிந்து
அந்தத் தலத்தி லதிசெய மெல்லாம்
விந்துத் தனுத விளக்கொளி யென்று
அறிந்து திருப்பதி யதிலுள்ள தீர்த்தமும்
தெறிந்தறி வாகச் சிலாந்தி மூழ்கி
மாலை வணங்கி வடிவுள்ள லட்சுமி
செயலது கொண்டு சென்று அனுகதம்
பெற்ற காளத்தி பொருந்தி மூழ்கி
சித்தரி ருத்திரன் சேவடி போற்றி
உத்தரி பதத்தை உச்சரித் துள்ளே
சித்தரி யெனையாள் சிவாய நமாவென்று
தோத்திரஞ் செய்து தொழுதடி வணங்கி
மாத்திரை யேத்தி மயேஸ்பரன் றன்னைக்
கண்டுவி சுத்தியிற் கண்மலர் பரப்பி
சென்று மயேஸ்பரி சேவடி பணிந்து
வாயூர் தீயை வலமிடஞ் சுத்தி
தேய்வு பதியில் தீர்த்தங்க ளாடி
ஆக்கினு சக்கர மான சிதம்பரம்
நோக்கினுன் சிவனை துன்னறி வதனுல்
வந்துசிவ கெங்கை வளர்நதி யாடி
முந்துநடஞ் செய்த முன்றினில் வந்து
சதாசிவ னுன்மணி தன்னடி போற்றி
இதாசிவா யநமாவென் றேத்திப் புகழ்ந்து
சந்திர கிரிமலைச் சார்பது தனிலே
மந்திர தூபி மகாகன்னி தீர்த்தம்
ஆடுவோ மென்று அங்கைநான் சென்று
வாடு மனத்தை மதிகொண்டு தேத்தி
ஆடினேன் தீர்த்தம் அம்மலைக் கன்னிதான்
தேடினேன் கண்டு தெரிசித்துக் கொண்டு
நின்றே னவளுட திலவடிவைக் கண்டேன்

மதித்துக் கருவால் வணங்கி நிற்க
கையி லானந்த நீலி கபாலி
முன்கையில் சூலி முக்கண் பகவதி
வஞ்சி சிதம்பர வல்லிதான் கண்டு
கொஞ்சி கிளிமொழி கொம்பனை என்னை
வாவென் றழைத்து மலர்ப்பதங் காட்டி
மாவென்று சுற்றும் மதியையுங் காட்டி
ஞான சமுத்திரம் நன்னிதி யமிர்தம்
வானே சிறந்த வடிவையுங் காட்டி
உன்னிதி யென்று உரிமையென் கையில்
பொன்னிதி யுடமை பொக்கிஷ மெல்லாம்
கைக்கொண்டு நினைத்தக் கருத்தை யறிகிலேன்
மைக்குழல் வல்லிதான் மனையி லழைத்து
கட்டிய வாசிக் கருவா யமுது
இட்டாள் மருந்து வினிதென்று தின்று
கருவா லுதித்தக் காசினி யதனில்
மருவிப் பிறந்து மயக்கம தாகி
மதிவிதி கெட்டு மங்கையைச் சுத்தினான்
பதிருதி யெல்லாம் பதிக்கக் கொடுத்துநான்
நிதிபுகழ் வல்லி நீசெட மெடுத்து
வாவென்று சொல்லி மருந்திட்டு ஓட்டினாள்
மங்கை மருந்தால் மயங்கினன் மெத்த
செங்கை தனிலே திருவோ டெடுத்து
வந்தேன் சபையில் உலகவா சனைவிட்டு
தந்தைதான் அங்கண் தமையனைத் தேடி
மங்கை சிதம்பர மண்ணினில் நின்று
சிந்தை மகிழ்ந்து சிவசிவா வெனவே
மதியுள்ள மன்னன் வங்கணக் காரனை
துதிசெய்தான் சபையில் தோன்றினான் முன்னே
கண்டவன் றன்னைக் கட்டி முகந்து
நின்றவன் வல்லீ நே (ா) ர்தனைச் சொன்னான். (155)

**விருத்தம்.**

ஆகிய தேசம் பொன்னும் அடர்பொரி கரியுந் தோத்து
யோகிசன் னசி யென்ன வொருத்தனு மாற்றா னகி
தேகியாய் தேச மெங்கும் திரிந்துநான் பலிக ளேற்று
மாயியாள் வல்லி யாலே மதிகெட்டே னண்ணே யென்றான். (156)

**கொச்சகம்.**

மன்னவனே தேசம் மதகரியும் வான்பரியும்
பொன்னகைக ளுள்ளதெல்லாம் போதவல்லிக் கேகொடுத்து
என்ன நினைவழிந்து ஏகவெளி யூடுதுணை
உன்னையுங் காணமல் நினைவுற்றமதி கெட்டனண்ணே. (157)

உத்து மனமறிவால் யோகமதைப் பாராமல்
சத்துமுறை தப்பியுயிர் தானிறந்து பின்பிறந்து
மற்று முலக மயக்கமதிற் சிக்கியேனுன்
பத்தும் பதினஞ்சும் பட்டகள மெத்தவண்ணே. (158)

தரு.

பட்டகள மெத்தவுண் டண்ணே—உலகந்தனிற்
பட்டகள மெத்தவுண் டண்ணே
பட்டகள மெத்தவுண்டு பாரினிற் பிறந்தபின்பு
கட்டளை வல்லிதனைக் காணவென் றுன்னைத்தேடி—
பட்டகள மெத்தவுண்டண்ணே. (159)

முந்திக் கருவினுதித்து [அங்கிருந்து] முந்நூறு நாளுங்கழித்துப்
பிந்திப் பிறந்திளைத்து பேராசை கொண்டுழைத்தும்
ஊந்திக் கமலமதில் உற்பொருள் தனைத்தேடி
—பட்டகள மெத்த. (160)

தவழ்ந்து நடந்து ஓடியே அப்பாலே
அன்னந் தானே ருசிகள் தேடியே
கவிழ்ந்துலகத் தாசைமூடி கருவான பெண்ணைக்கூடி
மகிழ்ந்தின்ப துன்பமதாய் மருவிப் பிறந்துலகில்—பட்டகள. (161)

கும்பிக் கிரைகள் தேடியே லோகமெங்கும்
குலைகள வாக வோடியே
வெம்பியுர்க ளோடி சம்பி முகங்கள்வாடி
நம்பி உலகமதில் தும்பி முகனைத்தேடி—பட்டகள. (162)

ஆசையென்னும் பாசமூடியே பொல்லாத வஞ்ச ஆயிழைதன்னைக்
[கூடியே
காசைக் கல்லியோடிக் கண்ணும் எண்ணும் பூசலாடி
வேசைக் குணங்களோடி
மெய்ஞ்ஞானந் தன்னைத்தேடி—பட்டகள. (163)

நூல்பழக்கம் பாராமலே தான் தண்ணிடையாள்
மேல்பழக்க மாகி னேனுன்
வேல்பிளக்கும் பெண்ணிலாசை மெத்தவைத்து சுத்திமதி
ஆள்பிளக்குங் குரங்குபோல் அகப்பட்டுக் கொண்டுலகில்—பட்டகள.
(164)

கட்டுக்குள் காடை போலவே
வலையிலகப்பட்ட றுத்தமான தெனவே
எட்டுக்குளகப்பட்ட சிட்டை போலவே
யுலகந் தொட்டுத் துடனுனேன் விட்டுப்பிரியாமலே—பட்டகள
(165)

பெண்ணைவிட்டு மண்ணைவிட்டுப் பெண
பொல்லாத ஆசை விட்டு
என்னைவிட்டுப் போகமதுன் முன்னைவிட்டுப்
போகமதி யண்ணே கெட்டு மூவுலகந் தன்னை விட்டு
வான்மதியை அன்னைத் தொட்டு நாவுலகில்—பட்டகள. (166)

கருவாய்ப் பிறந்துலேந்து நாலஞ்சு வாசல்கட்டி யதனுல
[லேந்து
உருவாய்ப் பொறிகளைந்தும் ஒன்றேடொன் றெவ்வாதலேந்து
கருவாய் உருவெடுத்து தான்மறைந்து நாவுலகில்—பட்டகள. (167)

பாலுமுறை நின்றுடுந்தல்லி சின்மயமான பத்தும் யரை
[நூலென்று சொல்லி
நாலுமூலே தேடுகையில் நடுவிலே நாயுருமக்
காலுமென்ற வல்லி காரணத்தை யறியாமல்— பட்டகள. (168)

சுரபியெனுஞ் சித்தரகவே அனந்தவரை தோற்றியறி விலானவே
இரவிமதி கூடிவரு மிசைத்தந்த வேளேயிலே
மருவுசுழி வாசியுடன் மனஞ்சென்று நிலேயாமல்—பட்டகள. (169)

எட்டுடனே நால்கூட்டியே சிவாயநமா வென்றே காந்த ரூபமாகவே
அட்டவித யோககலே நான்பார்க்க வேணுமென்று
வட்டமிடும் ரீங்கார வல்லிதனைத் தேடினுன்—பட்டகள. (170)

## கொச்சகம்.

மட்டுற்ற மாய்கை மனமான கோந்திமன்னன்
பட்டுற் றெளிந்து பகீரதியைக் காணுமல்
விட்ட குறையும் விதியுமுண் டாகையினுல்
வெர்ட்டுற்ற வார்த்தைசொல உற்றதுணை யாமடண்ணே. (171)

ஆமடா ஆனேயா தேசம் பொன்னுளதும்
போமடா சும்மா பொறிகலங்கி நீசலித்து
தாமடா வல்லிதனக் கீய்ந்தோ மென்றுரைத்தாய்
நாமடா கேட்க நடந்தவிதஞ் சொல்லுமென்ருர். (172)

## தரு

அண்ணே நீ கேளாயோ நானும் பட்டபாடு மெத்த
மண்ணுனேன் விண்ணுனேன் அங்கிவாய் வுடனிருந் தானுனேன்
புண்ணுனேன் நெஞ்சினுள்ளே இதுபொய்யல மெய்காண
[சொல்லுகிறேன்
பண்ணுன கோந்திநகர் அல்லி பட்டணமாங் கெடிதனத்தில்.
(173)

அரசாகி நானிருந்து தேசமாண்டு செங்கோலுஞ் செலுத்துகையில்
துரைசாமி என்னுடைய அத்தி கோந்தி வய(யி) த் தோணந்தி
[மகன்
விரசாக வந்துலகில் மூலவித்தைக் கொடுத்து விளம்பினதும்
அரசாதி ரூபமெல்லாம் போய்வாழ்விது கண்ணிக்கு மாய
[மென்றார்.
(174)

மாயாப் பிசத்தைவிட்டுப் புவிவாழ்க்கை விட்டாசை நோக்கை
[விட்டு
பேயாப் பிசத்தைவிட்டுப் பெண்பேச்சை விட்டுக்கலை மூச்சை யோட்டு
[டிக்
காயாப் பசத்தையோட்டென்று காட்டித்தந் தறிவூட்டித் தந்து
தேயாப் பிறைமுடித்த சிவன்சித்தன் சதாசிவன் சொற்கேட்டு
(175)

தத்துவனூல் பாத்தந்த தாயமணி வேதாந்தந் தான்பார்த்து
மற்றும்பொருள் பாத்துமூல வர்க்கத்தி லுள்ள வழிபார்த்து
சுற்றம்சுழி பார்த்துவீசுந் தூசியில் வாசியைத் தான்பார்த்து
ஏற்று நிலைத்தபின்பு அரியோ மென்றுபூசைக் குளவாகி. (176)

நாற்பத்து முக்கோண வட்டம் நாட்டிய சக்கர மேருவதில்
காற்பத்தி கொண்டு மதிரவி கண்டஞ் சுற்றிக் கரும்பிளநீர்
சேர்ப்பத்தி மாவடையும் அன்னந் தேனுட நெய்யும் பலகாரம்
நேர்ப்புத்தி யாகவைத்து அஞ்சு நேருள்ள பாத்திரந் தான்பரப்பி.
(177)

இட்டே சதிர்வரை மூன்றித ழெட்டுரூனு வாசல் விட்டு
எட்டேசி ரேகைவிட்டு அதிலின்ப வளைய முக்கோண மிட்டுத்
தொட்டே சபீசவரை இரவி தோன்றிய குங்குமத்தால் விரவி
நட்டேன் குருபதத்தை விந்து ஞட்ட திக்காலை நடுவழைத்து. (178)

அன்பத்தோ ரட்சரமும் பிசமங்கங் குவயங்குட் பரப்பி வைத்து
நன்பூக் கணபதியை முன்பு நாட்டிவைத்துப் புறஞ்சூட்டி வைத்து
தென்பூங் கனிவகையும் நல்ல தெட்சணைகள் பழுத்த வெள்ளிலை
[யும்
இன்பமணித் தூபந் தீப மேத்தியே பூசித் திறைஞ்சியபின். (179)

குருவான பாத்திரத்தில் ஆவி கூட்டி யுருவை ஞட்டிவைத்து
திருவான அஞ்செழுத்தில் மூன்றைச் சேர்த்து உருவைச் செபித்
[தறிவில்
துருவான தேவி சிவனீந்த கன்னி பிறசாதந் தானருந்தி
மருவான சற்குருவை என்று வாழ்த்தித் தொழுது வணங்கிநின்
[றேன். (180)

அய்ந்தான சிதம்பரத்தில் நித்தம் ஆடும் வல்லித் தமிழ்ப்பாடும்
[வல்லி
விந்தாள மதிமுகத்தா ளாவி மொய்த்தனர் நான்கையில் பொத்
[தகத்தாள்
தந்தாளுங் குங்குமத்தாள் தண்டைச் சத்தம் சிவசிவந் தாளெனவே
வந்தாள் சொரூப மணிதந்து வாழ்விக்க வென்று மனதுவைத்
[தாள். (181)

கொந்தார் குழலழகிக் கொண்டைக் குச்சழகி முத்து மெச்சழகி
விந்தர்மதி நிறத்தாள் நாத மவத வெளியி லொளியழகி
முந்தாச் சிவப்பழகி அன்பாய் முத்திக் கொடுக்கு முறையழகி
பைந்தா முலையழகி ரூபம் பார்க்கப் பசும்பொன் மேலழகி. (182)

வந்தடிமை கொண்டாள் கிட்டவாவெனக் கூப்பிட்டு வார்த்தை
[சொல்லித்
தந்தா ளமுதையது தானென் றுபதேசந் தானு வைத்தாள்
இந்தபார் குஞ்சரந்தான் கூடியிருந்த யிடருசத்தி மூல மென்று
எந்தாய் புருவல்லி சுத்தியேத்து மென்றுளினிப் போற்று
[மென்றுள்
சந்தப்பதம் படித்தாள் அதுதானே சரசோதி யாகு மென்றுள்.
(183)

விருமா விருக்குளிந்த வீடிதென்றுள் முத்தி நாடி தென்றுள்
பெருமாள் பதியில் வந்தாள்பெண் பேராசை கொண்டக்கண்,
[ணீரிதென்றுள்
தருமா திருத்திரன் தான்நெத்தித் தானமென்றுள் சுத்திப் பான
[மென்றுள்
வருமானே மத்தகத்தி லந்தமயேச னிருக்குறுன் பாரு மென்
[றுள். (184)

சத்தபரீச ரூபந் தானே கோந்தி கூட்டுஞ் சதாசிவன்தான்
உத்தயிட மிதென்றுள் உச்சியோ மென்ற வட்டத் தொனியிதென்
[றுள்
சித்தர் பதஞ்சலி தான்மத்த தேவர்களும் போற்றுஞ் சிவமிதென்
[றுள்
பத்தர் சமாதி ஐவர்கூடும் பஞ்சபூத நிலையாகு மென்றுள். (185)

கண்ணுக்கு மூக்கு செவிமனங் காணுஞ் சிவசத்தி ரூபமதை
ஒண்ணுக்க வேணு மென்றுள் இதுக்கூமை யெழுத்துப தேச
[மென்றுள்
மண்ணுக்கும் விண்ணுக்கும் அங்கி வாய்வுடன் நீரும் தாணுக்கும்
பின்னுக் கிடைசுழிதான் மூன்று பேரையும் அஞ்சோடே கூட்டு
[மென்றுள். (186)

நெஞ்சா லழிவுதித்து இந்த நேராறு சுக்கரங் கண்டபின்பு
எஞ்சாண் உடம்பு பஞ்சுயிதுக் கிட்டபொறி யஞ்சும் சத்தியப்பா
கொஞ்சமிது வல்லக்காண் கண்டு கூடின பேருக்குக் குருவாகும்
வஞ்சவினை போகும் நல்ல வாக்கியஞ் சொல்ல வருமிதுவால். **(187)**

காயம் பலப்படுத்த ஒருகாரியஞ் சொல்லுகிறேன் கேளு மென்றாள்
மாயும் விடுகவென்று விந்தவாசனைப் பொய்களை மாற்று மென்
[றாள்
நாய மழியு மென்றாள்விந்து நாதாந்த வாலையை நாடுமென்றாள்
தோய நிலையிதென் றுளிது சொக்குவ தெங்கே எனக்கேட்க.
**(188)**

ஐந்தாங் கருவிதனைச் சுட்டு ஆராய்ந்து சித்தர் மணிவாசல்
வந்தால் அதில்நுழைந்து வுச்சி வாசலும் தோன்றும் வழிதோன்
[றும்
முந்தக் கணைவாயில் சங்கு முத்திரைச் சக்கரமுந் தோன்றும்
இந்தப் பிறவிதனை மாற்று மிதுவு முபருத விந்தையடா. **(189)**

காலாக்கரு வெனவேயரி கண்டத்தைச் சுற்றிய சித்தரியை
நாலாவித முத்தரிபதம் நாட்டியே யெட்டோடே கூட்டிடு வாய்நீ
மேலாம் பதமிதுவாம் சித்தர் மெச்சிடும் புத்திர்வி மதியை
மூலமிது வெனவே அங்கி மூட்டிவைத்து உருக்காட்டி வைத்து.
**(190)**

மாத்திரை யேத்திமென்றாள் உச்சி
வாசல் திறந்து வாருமென்றாள்
பாத்திரங் கொள்ளுமென்றாள் மெத்த
பாழான ஆசையைத் தள்ளுமென்றாள்
கோத்திர ஆசனத்தில் பூரங்
கொண்டினி கும்பக ரேசகத்தை
யேத்துள் நாசினுனி வுச்சி
யெங்குறு சிவந்த பதமாக்கி. **(191)**

தோத்திரஞ் செய்யுமென்று ளின்ப
துன்பங்களெல்லாந் தொலைக்கு மென்றாள்
சாத்திரத்தைத் தள்ளு மென்றாள்இது
சங்கற்ப விந்தை சருவகலை
மாத்திரத்தி லுள்ளாக்க கொண்டு
வாருமென்றாள் கண்டு தேறுமென்றாள்
யேத்திர வண்டு ஒன்றுசிட
மிட்டிடு சத்தி சிவனும். **(192)**

ஆமாம் சகலத்திர மாமிது
அய்யெட்டு முக்கோண்டு நற்றிரமாம்
ஓமா மெனவிருந் தாள்விந்து
ஒத்த சவுந்திர ரூபவல்லி

தாமாவென வுளைத்து யோக
சாதனை யுஞ்சிவ பூசனையும்
மாதுதான் காட்டக் கண்டு
பூரித்தவள் பதம்போற்றி நின்றேன். (193)

அரிதான வாய்திறந்து சிங்கமாம்
பிள்ளைநீ மகராசன் என்றே
பரிதான மிங்கை கொண்டுயென்
பக்கத்தில் காய்கைய ரோகத்திலே
துரியாதீதப் பொருளை வாங்கத்
தோகை நல்லாளுந் தொழிலெடுத்துக்
கரிதானிலை பறித்து நெய்கலந்து
மருந்து கருதி யிட்டாள். (194)

தின்று மதிமயங் கிவருஞ்
சேத்துமத்தில் விழுந்தீய்ப் போலே
நின்றுகலைகள் சுற்றி மெத்த
தேரென்று கும்பஸ்த் தனந்தோன்றுங்
கொண்டென் பயிற்றியதே வல்லி
கோரமுகத் தாள்வர்த மேமுகத்தாள்
சென்றேன் மதிவீட்டில்காயசித்தி
செய்யோகத் தில்முத்தி யுண்டாம். (195)

என்ற மொழிகேட்டு மூல
மேத்தி யவள்பதந் தோத்திருந்தேன்
தண்டா மரைத்திருவாள் என்தன்னைக்
கண்டாள் கையில் பொன்னைக்
கண்டாள் தொண்டாக்கி யாண்டுகொண்டாள்
சிவதும்பிக்கை யானைத் துணையெனவே
உண்டாள் கைப்பொருளைப் புத்தி
இருமிக்க தடியுறுஞ்சு கைபோல. (196)

வாங்கும் வகையாக மெத்த
வாங்கிவிட் டாள்கொடுத் தேங்கிவிட்டேன்
ஓங்கும் பொருள்கோடி யிருபத்தோ
ராயிரத் தெண்ணூறு பொன்னும்
நான்கு வகையாலு மேவின்
பத்தினாள் கையில் பொன்பத்தவே
பூங்கூந்தல் போகவல்லி ரத்தினப்
பூவைச் சுகந்த வசந்தவல்லி. (197)

சாத்து மொழிய தனைமனஞ்
சஞ்சலத் தாலே தவித்திருந்தேன்
பாத்துப் புவன வல்லிகையைப்
பற்றி யிழுத்து பரிவேசித்து

சோத்து ருசியாய் போவென்று
　　சொல்லிவிட்டு என்னைத் தள்ளிவிட்டு
மாத்தும் பிறவி யங்கேவாரே
　　னென்றாள் விட்டுத் தாரேனென்றாள். (198)

தொடுத்தாளே ராமசாம வல்லித்
　　தொந்த மென்றுடத் துணிந்துகொண்டாள்
கடுத்தாள் முகங்கிழவி அந்த
　　காரிழை யம்மைக்கு நேரிலையாள்
அடுத்தாள் செடங்கருவில் பிறந்தத்தி
　　புலியூரில் வாருமென் றாளே
எடுத்தாள் கருவோடு நானெண்ணுஞ்
　　செடஞ்சித்தி பண்ணு கைக்குள். (199)

கொடுத்தாள் வரமெனக்கு வல்லி
　　கூட்டு மருந்திட்டு ஓட்டிவிட்டு
படுத்தாள் பாழ்மூலையி லேமொழி
　　பைங்கிளி நீலி பாதகத்தி
விடுத்தா ளென்னை வெளியில்நான்
　　மேவிப் பிறந்துபின் மேதினியில்
எடுத்தேன் சரசாத்திரம் கொண்டு
　　இச்சபை தன்னிலே யிங்குவந்தேன். (200)

கொச்சகம்.

கொண்டுவந்தேன் சித்தர்முறை கொம்பனையாள் தான்கூறக்
கண்டுவந்தேன் வாசலுனைக் காணவென்று நான்தேடி
இன்றுவந்தேன் வல்லி யெனக்கிட்ட மருந்துதனைத்
தின்றுவந்தேன் என்பிறவி தீர்ப்பாய்செல் லண்ணே நீ. (201)

தீராய் பிறவிதனை தீர்க்க மருந்துவல்லி
சீராக விட்டாள் தின்றே மெனவுரைத்தாய்
நேராய் வகைபிரித்து நீதின்ற மார்க்கமெல்லாம்
பேரூர் சபையறியப் பேசுவாய் பேரரசு. (202)

## மருந்து வகை.

### (கலி வெண்பா)

அரசு துரியவல்லீ ஆதிசிவ யோகவல்லி
சரசுவதி கயிலை சார்ந்தவல்லி—விரசு
கொண்டெடுத்தாள் விட்டகுறை மருந்து உள்ளதெல்லாம்
கண்டெடுத்துக் கூட்டக் கருதினாள்—என்றும்

அடுத்தாரை யீடேற்றும் ஆனந்த வல்லிகண்
டெடுத்துகை மருந்து ஈதெனவே—கொடுத்தாள்
காயசித்தி யாமருந்து கன்னிவல்லி சென்னியுறு
மாயசித்தி யென்ற மருந்திதுகாண்—ஆயகத்தி
கொண்ட பேரண்டக் கோட்டு மலைமருந்து
கண்ட பேயத்தி கரிசாலை—உண்ட
மண்டூசகந் தான்பிரமி வாய்த்தமணித் தக்காளி
கண்டுக் கடுக்காய்பொன் னுங்காணி—உண்டுபெற
சீந்திசிவ வேம்பு சிவதை திருமேனி
தீந்துபடு நின்ற மதியமூலி—ஊன்று
நிலப்பனை ஐவலரி நீண்ட கருநொச்சி
தலத்தின் கொடுவேலி தான்முள்ளி—நிலத்தடி
சமுத்திராச் சொகிசா ரணைமுற் றுருக்கண்
அமுக்கிரா தூதுவளை அச்சடைச்சி—தமக்குளு
வெள்ளறுகு வெள்ளெறுக்கு வெண்குரா குலார்மூட்டி
கொல்லி பெருந்தும்பை குன்றியுடன்—தல்லி
சித்தாமுட்டி பேராமுட்டி சிறுபுள் ளடிக்கஞ்சா
வுத்த விருபாக லீலைக்கள்ளி—சித்து
செகதோட்டி கெருடன்கிழங்கு செப்பு நெருஞ்சிசிவன்
வந்தோட்டி யெட்டியொடு வன்பாளை—விந்தோட்டி
தொட்டால் சுருங்குமரு தோன்றியுடன் தான்றிக்கா
யிட்டகரு வூமத்தின் பூதல்—துட்ட
நேர்வாளஞ் செங்கொட்டை நீலி நனைச்சுருட்டி
கார்கரும்பு பூனைக் காலியுடன்—சிராய்
ஓரிதழ்த் தாமரை உத்ததேவ தாளியுடன்
ஆரிய ளுகத்தாளி யழுகண்ணி—பாரில்
சூரியகாந்தம் பாலாசு துய்யபுடல் காரம்போகி
பூரிதா னந்திபே ராமல்லி—தெருதரும்
கருஞ்சீ ரகமும்வாய்க் காட்டுமுக் காவேளை
தருஞ்சோதி யாடில்லா தாளை[ழை]யுடன்—வரும்பேதி
வாலுளு வையுஞ்சுணங்கன் வாய்த்தகொல்லன் கோவை [விட்டுணு
மாலுளுவை கொம்மட்டியின் மாதளையின்—போதளக்காய்
கொண்டுவந்து சேர்த்தாள் குரும்பை மூலயழகி
சென்று கடைமருந்து தேடினாள்—உண்டுகேள்
பாதரசமு மாதப் பாஷாண முங்கவுரி
வேதக்கரு ளுவிதோட்டி வெண்ணுவி—ஊது
வெள்ளைப் பரங்கிஎலி மெய்க்குதிரைப் பாஷாணம்
உள்ளசவ் வீரம்கொச்சி உள்சாரம்—வில்ள
மிள்ளமொடு தீமுறுவல் மீதிரசக் கற்பூரம்
கொள்ள வரிதாரங் கொடுஞ்சிங்கி—உள்ள
தாள்கம்ப பீற்கம் தான்காக்கைப் பொன்னிமினா
கானகுரு வேங்கலத்தின் காஸ் நிமிளை—வேழம்

அக்கிக் கடந்தோட் டீயாமிது நாலுவகை
தக்குறவு காந்தமது தானுலு—மக்குறவு
சேர்ந்த துருசு சிவந்தமடல் துத்தமுடன்
வாந்ததுத்த ஞகம் மனேசிலையும்—ஆய்ந்த
அன்னத்தின் பேதி அரியமாங் கிஷபேதி
வன்னத்தின் கெந்தி வயிரமுடன்—முன்னத்தில்
சத்தி நவச்சாரம் சார்வா யிவச்சாரம்
புத்தி யுவர்சாரம் பூவத்தக்கல்—முத்தி
சவுக்காரஞ் சினத்தான் காரம் வெங்காரந்
தவுக்காப் பொறிகாரந் தான்கூட—சீவுக்காய்
கற்பூரத் தின்சிலையும் கல்நாறிக் கல்மதமும்
பொற்பூர மாலாற்றிப் பூரமுடன்—செப்புகிறேன்
கல்லுப்பு முறியுப்புக் காணும் வெட்டியுப்பு
இல்லுப்பு வொட்டுப்பு இந்துப்பு—மல்லுகிற
சவுட்டு வளையலுப்பு தாக்க முறியுப்பு
சவுட்டுப் புள்சரமுந் தான்கூட கவுட்டுங்
கடலில் துறைகூடும் கடைச்சரக்கு உள்ளதெல்லாம்
மடலெழுதும் குங்குமத்தாள் வாங்கினுள் உடல்முழுதும்
கார்க்கு முயிர்சரகுக் காரிகையாள் கொண்டு வந்தா
ளார்க்குமினிச் சொல்லா தறிந்துக்கோ—வெங்கும்
நண்டோடு நத்தை நல்லகுளச் சிப்பிசங்கு
அண்டோடு ஆமை அழுங்கோடு—கொண்டாடும்
பூநாகமுங் கொளுஞ்சி போருந்துங் குறிவண்டு
மாஞ கருடனுதை மன்னர்விந்து—வேஞ
காட்டுமுய லெலும்பு காரெருமைக் கொம்புடனே
கூட்டுங்குதி ரைக்குளம்பு கொண்டேதான்—நாட்டு
செம்மறியின் கொம்பு சேந்தபுரு வினெச்சம்
வன்மறிகள் காட்டு மயிலிறகு—பொன்னரியாள்
வாங்குஞ் சரக்கையெல்லாம் மங்கைநல்லாள் கொண்டுவந்து
தூங்குந் தராசுநிறை தூக்கியே—ராங்காய்
உப்பெல்லாம் சுண்ணம்பாய் ஊதியபின் மித்திரத்தை
தப்பில்வார் சத்தாக்கி தான்வைத்தாள்—செப்பெல்லாம்
ஆடுஞ் சரக்கையெல்லாம் அதிகவன மூலிகையால்
காடு புகையாமல் கட்டினுள்—கூடுஞ்
சுண்ணத்தில் சாரமிட்டு சூட்டிவைத்துப் பீங்கானில்
வண்ணமுற்ற செய்நீராய் வாங்கினுள்—முன்னேடு
கட்டுவகைச் சரக்கை கார்த்திகையாள் தான்தூக்கி
அட்டவிதச் சாற்றால் அலங்கரித்து—திட்டமுடன்
கல்வத்தி லிட்டரைத்துக் கடுக வழித்துருட்டி
மல்வைத்த அண்டரெண்டும் வாங்கியே—உள்வைத்து
சவ்வெடுத்துப் போட்டுலர்த்தி தன்னுள் மருந்தைவைத்து

நவ்வெடுத்து மேலோடு நாட்டியே—சிவ்வெடுத்து
மண்சீலை யேழுவகை செய்து தானுலர்த்தி
கண்சீலை மூடிக் கவசமிட்டு—முன்சீலை
காய்ந்துஉட லறுமுனே காட்டு விராட்டியினால்
ஆய்ந்த பீடமேழு மஞ்சிட்டு—தேர்ந்துகொன்று
அத்தர்தனைப் போற்றிநா ளாதிசிவ யோகவல்லி
வைத்த இடம்கவசம் வாங்கினாள்—உற்ற
செந்தூரம் கண்டாள் சிரித்தாள் முகமலர்ந்தாள்
நந்தூ ரிலாச்சிமிளில் நாட்டிவைத்தாள்—விந்தூரை
ஒட்டிவைத்துப் பொன்போட ஓங்கார வாசலிலே
கட்டிவைத்தாள் தொம்பதையின் காலூணி—தட்டியுதைக்
கையில் பணம்பறிக்க காரிகையாள் தானினைந்து
செய்யு முபாயமெல்லாம் செய்தபின்பு—பையவே
எந்தனுக்குப் போடுதற்கு ஏற்ற வனுபானந்
தந்தனக்குத் தேடினாள் தையல் நல்லாள்—முந்த
கழுவிலே நெய்யுருக்கும் காரிகைபோல் வல்லியும்
கொழுவிலே நெய்யுருக்கிக் கொண்டுவந்தாள்—வழுவில்லை
என்று மதயானைக் கிட்ட குடோரியெனக்
கொண்டுவந்து தேனுடநெய்க் கூட்டினாள்—பண்டு
உகந்த செந்தூர மொக்கவதில் சேர்த்து
பகுந்து சிமிளில் வைத்துப் பாலித்தாள்—மகிழ்ந்து
வண்டு முகவாமலர் தாவிக் கைகுவித்து
தின்று சிவபத்தை நேசித்தாள்—என்று
சித்தர்களைத் தேற்றினாள் சிதம்பரத்தை வாழ்த்தினாள்
பத்தருக்குக் கைமுறைகள் பாலித்தாள்—நித்தம்
ஒருமா விடைகுருத்தா யூட்டிப் பணியார்மதில்
திருமா திடைப்புகுந்தாள் தின்றேனன்—வருமா
வினைகளைந்து சித்தர்பதம் ஏத்தினேன் மாதுவல்லி
தனைமா வறிவுதித் தன்பிற்கு—உனைமாச்
சக்கரையி லேகூட்டித் தந்தா ளிருபதுநாள்
ஒக்க அதைக்கூட்டி யுண்டேநான்—தக்க
உடல்சித்தி யாக்கவல்லி உள்ள மருந்தையெல்லாம்
குடல்சுத்தி யோமதுவைக் கூறுகொண்டாள்—திடச்சுத்தி
கொண்டுலகத் தாசைவிட்டுக் கோதைவல்லி தன்னாலே
வென்றுலகைப் பொன்னுளதை வெளிவிட்டேன்—மன்றுள்கை
போட்டுப் பறித்தாள் பொக்கிஷத்தி லுள்ளபொருள்
சீராட்டுச் செலவு செலவழித்தேன்—கோட்டுத்
தேசமெல்லாங் கைகொண்டாள் தேன்மொழிக ளாசைகொண்டு
வாசமல ரோடுகொண்டு வந்தன னண்ணே. (203)

**(விருத்தம்)**

வந்தனன் கரிகள் மற்ற வான்பரி யெல்லாந் தோற்று
தந்தனன் தேசம் பொன்னும் சகலமுங் கொடுத்து வல்லி

விந்தெனப் பதத்தைப் போற்றி இருக்கையில் வேறு கூறுய்
எந்தனக் கோடு தந்தா னெடுத்துநான் சபையில் வந்தேன். (204)

வந்தன னென்று நீதான் வார்த்தைகள் மெத்தச் சொன்னுய்
உந்தனன் விதியை வெல்ல உண்டடா உலகந் தன்னில்
இந்தநற் பவுசு தேசம் இயல்பெல்லாம் எற்கு ஈந்தாய்
எந்தனக் குரைப்பாய் நீதான் ஈந்திடு வகைக ளெல்லாம். (205)

## கொச்சகம்.

### (தரு)

வாழ்வு சிவயோக மென்று வையகத்தை விட்டுவிட்டு
தாழ்வு பறையாத வல்லி தன்பதத்தி லன்புவைத்தேன்
நாவு துரைக்கமல றுதாந்தி யோட்டிவிட்ட
தாவு குறையாலே மதிதான்கெட்டு னின்றனண்ணே. (206)

மந்திரக் கட்டழகி சிந்தூர மிட்டாள் தின்று
முந்தூரை விட்டுவிட்டு அடண்ணே மூலத்தி லாசைவைத்தேன்.
(207)

ஆசைப் பிணிமருந்து வல்லி அன்றிடத் தின்றதிஞல்
ஓசைக் கடலுலகில் அடண்ணே என்ற னினைவிளித்தேன். (208)

அளிப்பாய் பதமிதென்று வல்லி அஞ்சுமா சக்கரையில்
தெளிவாய் சிந்தூர மிடத்தின்று செகச்சாலம் விட்டனண்ணே.
(209)

விட்டுமனந் தேரவல்லி இன்பத்தி ஞலெடுத்து
ஓட்டு மருந்தையிட்டுத் திருவோடு கைத்தந்தா ளண்ணே (210)

தந்திடு மிந்தவிலே தனிச்சாற்றிலே செந்தூரம்
விந்திட உண்டுலகப் பொய்விதிகள் மறந்தேனண்ணே. (211)

மறந்து கலைகள்கட்டு மிந்த மாய விதக்காயம்
இறந்தினிப் போகாமல் வல்லீ இவ்வோடு தந்தாளண்ணே. (212)

தந்தாள் காணண்ணே வல்லி தலையா னிலச்சாற்றில்
முந்தாளவ் வாசிதின்று செகமுன் செனுசை விட்டனண்ணே.
(213)

விட்டுமனந் தேரிவல்லி மெய்யாம் மருந்தையுண்டு
கட்டுங் கலையோடுநான் கைக்கொண் டிம்மட்டும் வந்தேன். (214)

### (கலிப்பா.)

விட்டெழுத்துந் தொட்டெழுத்தும் விந்துவளி யுந்தனக்கு
எட்டெழுத்துங் கூட்டுமுறை யென்றமருந் துண்டாய்நீ
ஒட்டெடுத்த யானைபரி உள்ளபொன் தேசமெல்லாம்
தொட்டெடுத்துத் தான்கொடுத்த தொகைவிபரஞ் சொல்வாயே.
(215)

கையூறு நாலுலட்சம் பொன்காணுங் குருநாடு
அய்யூறு வல்லிப்பிள்ளையார் அப்பனுக் கீய்ந்துவிட்டேன். (216)

அன்னமலைக் கொடிதான் பொன்னுவ லட்சஞ்சீர்மை
வன்னமுலை யாள்வல்லி தன்மருமகற் கீய்ந்தனண்ணே, (217)

கன்னங் கருவூறு அது காணுமே பத்துலட்சம்
தன்னம் புவனவல்லி தன்தமையனுக் கீய்ந்தனண்ணே. (218)

வன்னியீ ராறுலக்ஷம் பொன்வருகுஞ் சுளிக்கோட்டை
கன்னிகோ ளுன்னுக்குத் தாரைகையில்நீர் வார்த்தனண்ணே.
(219)

பண்டு விசுத்திக் கெடிபதி ஞறுலக்ஷம் பொன்காண
மாண்டும் புவன வல்லியுட மாமனுக் கீய்ந்தனண்ணே. (220)

சக்கரைக் கோட்டைப்பொன் தானதுதானே யிரண்டுலக்ஷம்
அக்கரைத் தேசமெல்லாம் வல்லியாண் மக்கட்கீய்ந்தனண்ணே.
(221)

அல்லிநகரம் லக்ஷம்பொன் ஞனநல் தேசமெல்லாம்
தல்லிமகன் றனையேநான் நன்னர சாளவைத்தேன். (222)

அல்லி மதயானை பொன்னுற் றாராக
வல்லி மகன்றனக்கு விலைவாங்கிக் கொடுத்தனண்ணே. (223)

பச்சைப் புரவிகளும் படைத்தலை வீரரையும்
கச்சிப்பதி யதனைவல்லி காக்க அனுப்பிவிட்டேன். (224)

பொக்கிஷ வீட்டில்சென்று வல்லிபோட்ட மருந்துதின்று
பக்கிச வான்களுக்கும் பலபேர்க்குந் தானமிட்டேன். (225)

கள்ளிமறைப் பசுவுமற்றக் காளைகள் கன்றுளதும்
உள்ளமுறை வல்லிக்குப் பாலுக்கோட்டிக் கொடுத்தனண்ணே.
(226)

பட்டிக் கிடையாடு பலதுண்ட மெத்தவுண்டு
ஒட்டிப் புவனவல்லிக் கொறுக்கோட்டிக் கொடுத்தனண்ணே.
(227)

வல்லிப் பொருட்டாலே இந்த வையகந் தானிழந்து
தல்லியெனும் டெயராயாண் சன்னுசி யானனண்ணே. (228)

கட்டில் சரப்பணியும் பொற்கடுக்க னரைஞாணும்
ஒட்டிப் பார்த்து வல்லியிந்த ஓமம்தா ளுக்கீய்ந்தேன். (229)

ஆனைபரி தேசம்பொன் னடங்கலுந் தோற்றுவிட்டு
மானைப்புகழும் வல்லிதன் வாசலில் தூங்கினனே. (230)

**கொச்சகம்.**

தூங்கினே நாடெடுத்து துன்மார்க்கக் கள்ளனைப்போல்
தேங்கினேன் மெத்த திரவியமுந் தான்தோத்து
வாங்கினேன் நோக்குகையில் வந்தேன் சபைதனிலே
தாங்கினேன் கொள்ளவகை தானரைக்கா சில்லையண்ணே.
(231)

### தரு

அண்நாக்கு மூக்குச் செவியடைத் தாளுடை கூடியிடை
பின்நாக்குச் சுத்தீச் சுழியில் அகப்பட்டேன் சிவனே (232)

கண்ணுக்கு வாக்குப் பறையாம லொன்பது கோடிகைகால்
கொண்டு கட்டக் கருவோடு தந்தாளே சிவனே. (233)

மாயவிதச் சித்து கற்றறி வானந்த வல்லிதை
மருந்தை யருந்தி வருந்தினே னென்செய்வேன் சிவனே. (234)

காயம் நிலைக்க ஈரெட்டுக் கோடிபொன் கமலிஉருக்
காட்டிக் கொடுத்ததைப் பாராட்டி களித்தேனே சிவனே. (235)

மாயத்தைப் புத்தியி னாலே யறியாமல் உலகப்பொய்
வாழ்வோடே கூடி மருவித் திருந்தேனே சிவனே. (236)

கோபத்தைச் சித்திக்க யோகத்தைச் செய்யென்று வல்லி
குருக்கூட்டு முட்டோட்டை கொடுத்தேனே ஓட்டினாள் சிவனே. (237)

காயத்தைச் சித்திக்க மாய்க்க வல்லிதாள் காட்டி
இரவிகண்டு மதியைக் கருவால் நினைத்தேனே சிவனே. (238)

தோயத்தால் நின்ற சிதம்பர வல்லிதாள் தொட்டுவெகு
தூரமான வார்த்தைபொய் கூறாமல் நின்றேனே சிவனே. (239)

தந்தை குருவல்லி விந்தை மதத்திலே கூடிக்
கைதட்டிப் பிழைத்தோடு வொட்டி யெடுத்தேனே சிவனே. (240)

எந்தைகரு வினுதித்த பொருட்டினி நானே வல்லிக்
கீய்ந்தேனே கோடி திரவியமென் செய்வேன் சிவனே. (241)

மந்தைத் தலைவாசல் போகீசன் ஞசிபோ லெனவல்லி
வாட்டந் திருத்திக்கை யோட்டைக் கொடுத்தாளே சிவனே. (242)

கந்தையில் மாங்கொட்டை விந்தையாம் வல்லிதாள் கூடிஒரு
தையல் பணம்பொன் சாளிகை தோற்றேனே சிவனே. (243)

### விருத்தம்.

சாளிகைக் கொடுத்தோ மென்று தலைதனில் ஓட்டை வைத்து
கோழிதான் கொடுத்தார் போலக் கூக்குர லிட்டு நின்று
யாழியான் நங்கை வல்லிக் களித்தேனுன் அரசு வென்றாய்
கேள்விதான் கணக்கு நீதி கேட்டவன் நீதான் போடா. (244)

நிதிகெட்டால் நல்ல வண்ணே நேரிழை பொருட்டி னாலே
பதிகெட்டுக் கயிலை யத்திப் பதியைநான் போற்றி நின்றேன்
விதிகெட்டுப் பேதமை யூறு வீற்றிரு வாரே னென்று
மதிதொட்டு நின்ற வல்லி வரவினிக் காணே னண்ணே. (245)

**கொச்சகம்.**

அண்ணே பொன்தேச மானே பரிகொடுத்து
பொன்னே நவமணியே பூரணமே தாவெனவே
சொன்னேன் தரவுனக்கு தொல்புவியில் வாரேனே
முக்கண்ணே ருடையவல்லி கண்ணில்வரக் காணேனண்ணே. (246)

**தரு.**

வல்லியைக் காணேனே சொல்லண்ணே
வல்லியைக் காணேனே
வல்லியைக் கண்டக்கா லோகமயக்கந் தீருமண்ணே. (247)

வல்லியைக் காணேன் மனவெளி தன்னிலே
மாதாந்தம் பூட்டி வேதாந்தங் காட்டி
வல்லியைக் காணேனே. (248)

சிற்றண்டம் பேரண்டம் தேடிச் சென்றே னுதிப் பதம்பாடி
பெற்றண்டம் புவனத் தூடிப் போனேன் குருநீலி யென்ற—
வல்லியைக் காணேனே. (249)

வித்தென்ற புவியி லோடி மெய்ஞ்ஞானந் தன்னில் கூடி
சுத்தென்ற சுழியில் நாடி சூக்ஷமத்தில் தேடினனோடி—வல்லி
யை. (250)

ஆறூறு தன்னி லோடி ஐயூறு கையி லாடி
சீறாறு பதங்கோடி சித்தெண்பத் தொன்றினில் தேடினன்—
வல்லியை. (251)

அட்டாதி லோகமெட்டும் அண்டகூட வாசல் மட்டும்
ஓட்டடுமா னுடுதோட்டு முற்றமாதி தன்னில் தேடினேன்—
வல்லியை. (252)

**கொச்சகம்.**

மண்ணடந்த தேசம் மலைகுவடுந் தான்தேடிப்
பின்னடந்து கால்சலித்து பேருலகந் தனில்வந்தேன்
கண்ணடந்த யோகங் காட்டும் கருணைவல்லி
என்னிடந்தான் வந்தக்கா லிப்பிறவி தீருமண்ணே. (253)

**தரு.**

வல்லி வாராளோ லோகமயக்கந் தீராளோ
சொல்லிய வேதப் பொருள்பல கோடி
தொட்டுக் காட்டிய தோகை யிளமயில்—வல்லி. (254)

தல்லி புவன மதிலருள் தாரேன் வாரேனென்ற
அல்லியாங் கோதை வெளியொளி ஆனந்தன் தன்னில் நின்ற—
வல்லி. (255)

சூக்ஷத்தில் மோக்ஷமென்று முன்சொல்லி விட்டேந் தனக்கு
பேச்சித் திட்டத்தில் நின்று பெருமைகள் பேசுகின்ற—வல்லி. (256)

கையில் பணம்பறித்து என்னைக் கால்கழுவி யோட்டி
அய்யில் புகழ்பறித்தாள் சிற்று னந்தங் காட்டினின்ற—வல்லி
வாராளோ. (257)

உற்ற பரவெளியில் பாய்ந்து ஓடியே போகாமல்
சித்தர்வழிலே சுத்த நித்தம் செய்யென்று சொல்லிவிட்ட—
வல்லி. (258)

ஆதி குருமுறை தான்முன் ஞனது தானதுவாய்
சோதிமுணி வேதமுன் சொல்லவும் வாரே னென்ற—வல்லி
வாராளோ. (259)

**விருத்தம்.**

மயங்கிநீ மதிதான் கெட்டு மாத்திரை கொண்டு வேத்தி
தயங்கிநீ தேசந் தோறும் தாண்டிநீ பார்த்து வந்து
தியங்கிநீ வல்லிவந்து தன்னைத் தேடினேன் காணே னென்றாய்
முயங்கிநீ தேடுந் தேசம் மொழிந்திடும் முனியே என்றார். (260)

**தரு.**

பதியாது என்பார்க ளண்ணே—நான்
பதியின்ன தென்றறியேன் என்முன்னே
துதியாது பதியூறு சென்றே நானண்ணே
தோகை வல்லி யாடுகின்ற துறைகாணேன். (261)

பரியுரு வென்பார்கள் அண்ணே—ஞன்
பாயும் பரியென் றறியேன் முன்னே
அரியுரு யிடமாகச் சொன்னேன் யென்னன்னே
வல்லி திருவடிவங் காணேன். (262)

மாற்றூரு வென்பார்கள் அண்ணே—ஞன்
மாற்ருென் றறியேன் முன்னே
ஆற்றூரு வலமாகச் சென்றேன்—சித்
தானந்த வல்லி யுருவன்றிக் காணேன். (263)

அய்யூரு வென்பார்கள் அண்ணே—ஞன்
ஆறூரு வென்றறியேன் முன்னே
புருமையூரு வலமாகச் சென்றே—ஞன்
மாதுவல்லி திருவுடன் வடிவுங் காணேன். (264)

கருவூரு வென்பார்கள் அண்ணே—நான்
கருநின்ற வாறறியேன் முன்னே
மருதூரு இடமாகச் சென்றே—நான்
மங்கை வல்லிதன்னை உருவங்கைக் காணேன். (265)

கோடாறு வென்பார்கள் அண்ணே—நான்
கோடின தென்றறியேன் முன்னே
வீடாறு வலமாற்றூர் சென்றே—னுன்
மிக்ககுரு வல்லியுட வேத்ததை காணேன். (266)

**வெண்பா.**

காணேன் மதிமயங்கிக் கன்றுதனில் வந்து
வீணே பிதற்றுகிறாய் மெத்தவும்நீ—ஊணே
னெஞ்சறிவு கான்சிவமாம் நினைத்தமனஞ் சத்தியதாம்
பஞ்சறிவு வல்லிப் பதம். (267)

**கலிப்பா.**

பஞ்சறிவு வல்லியுட பாதமென வுரைத்து
அஞ்சறிவு காட்டுதற்கு அண்ணேநீ யல்லாமல்
நெஞ்சறிவு கண்டவரார் நேரிழையைத் தான்கூடும்
கொஞ்சறிவைப் போக்கிவல்லி கூட்டறிவைக் காட்டுமண்ணே. (268)

**விருத்தம்.**

காட்டுமென் றென்னைச் சொன்னாய் கரியாமல் தங்கை வல்லி
நாட்டமுங் கூட்டங் காண நமக்கடை யாளங் கண்டால்
ஆட்டவான் புவனந் தேடி அங்கைநான் சென்று உந்தன்
வாட்டமுந் தவிர்கூட்டி வருகிறேன் மதியுள் ளோனே. (269)

**கலிப்பா.**

தல்லிக் கரைவீடு தானு யிரங்கோடீ
சொல்லித்தெரு வீதிகம்பந் தோன்று மணிவாசல்
செல்லிக் கறிவுதரும் தேகம் சிவகாம
வல்லிக் கடையாளம் வலதுபுற மாண்னண்ணே. (270)

**தரு.**

வல்லிக் கடையாளஞ் சொல்லி வருகிறே னினிக் கேளண்ணே
அத்திபுர மடுவில்சுத்தி ஆயிரத் தெட்டிதழ் நடுவில் சத்தி
கணபதி போல்வல்லி தானிருப்பாள் அடையாள மண்ணே. (271)

சுத்தி நாகமலைக் கணவாய் தோகைமலை யடிச்சார்பி லண்ணே
சத்தி நடுவணையில் வல்லி தானிருப்பா ளடையாள் மண்ணே. (272)

முத்தணி மார்பழகி மூன்று முறைதருமுக் கண்ணழகி
சித்தணிவல்லி கொலுச்சிங்கந் தெரிசினை யாமது பரிசினைகாண்.
தண்டைப் பதமுடையாள் நெற்றிதனிலே
இளம்பிறை தரித்தி ருப்பாள் (273)
தொண்டைக் கனிவாயாள் வெள்ளைத்
துயிலோடை பின்னடையா ளண்ணே. (274)

பொத்தகமீன் படிகஞ் சங்கு
பொன்றிகை யொன்று பொருளுடையாள்
வித்தகஞ் சொல்லத் தரித்துவல்லி
வீற்றிருப்பாள் அடையாள மண்ணே. (275)

வெண்டாமரை வீடாள் வெள்ளை
மெய்யணி இடைக்கலை அன்னநடையாள்
கண்டால் நீவாயோ வல்லி
காதிலே ரவிமதி காணுமண்ணே. (276)

வாசல் மணிவீடு விந்துவிரு சுழியைந்து தருவீடு
வீசமணி ஞவில்வல்லி வீற்றிருப்பாள் அடையாள மண்ணே. (277)

நிம்பைத்தார் முடிப்பாள் மெத்த நீலி கபாலந் தரித்திருப்பாள்
செம்பைப் பொன்னுக்கும் வல்லியவள் சித்து வித்தைக்காரியா
[மடண்ணே. (278)

**கலிப்பா.**

காலோ சிவப்புப் பொடிப்பச்சை தண்டைக்கண் நீலமணி
மேலோ வயிரம் பவளச்செவ் வாய்முத்து வெண்ணகையாள்
சேலோர் வளர்புட்ப மாகமின் னெஞ்சு சிறந்த வல்லி
வேலோ பிடித்தகை கோமேதகம் வயிடு ரியமே. (279)

**கொச்சகம்.**

அங்க மடையாள மறிந்துநன்றாய்ச் சொன்னாய்நீ
பங்கமில்லை யான்தேடி பார்த்து வருவேன்காண்
தங்க மலைக்குவடு தாரணியெல் லாந்திரிந்து
பொங்கமதாய்க் கூட்டிவரப் போகிறே னெனவுரைத்தான். (280)

**விருத்தம்.**

போமென்ற அண்ணல் தன்னை பொற்பதம் போற்றி நிற்க
ஆமென்று திசைகள் நோக்கி அவனியில் நடக்கும் போது
தாமென்று வழியைக்கட்டி தடுத்திடும் நிமித்தங் கண்டு
வோமென்று பொன் சொல்ல னுயர்ந்திடுஞ் சபையில் வந்தான்.
(281)

வந்தவன் றன்னைப் பார்த்து வளர்மதி யுள்ளோன் சொல்வன்
விந்தமுற் றரசே நீதான் மீண்டது வேதோ வென்ன
உந்தனைக் காகச் சென்று ஓடினேன் வழியில் கட்டி
எந்தனைக் கிடந்தே பாய்ந்து ஏவியே தடுத்த தென்றான். (282)

**தரு.**

இதுநல்ல நிமித்த மண்ணே—வல்லி
இருக்கிற இடந்தேடிச் சுருக்கச் செல்லே—இதுநல்ல (283)

கட்டி யிடமானால் வல்லி
கெட்டி குருவென வருவாள்காண். (284)

கோடியிட மானுக்கால் வல்லி
நொடியி லிடைபின்னுய் வருவாள்காண்—இதுநல்ல (285)

வாசி வலமானுல் வல்லியைக்
காசி தனிலே காணுவர்காண்—இதுநல்ல (286)

வலியான் வலமானுல் வல்லி
ஒலியா தெதிரே வருவாள்காண்—இதுநல்ல (287)

கருமுகி லிடமானுல் வல்லி
திருமயி லுருவென வருவாள்காண்—இதுநல்ல (288)

போத்து வலமானுல் வல்லி
பார்த்துக் கருணைப் பதியருள்வாள்—இதுநல்ல (289)

காடை இடமானுல் வல்லி
பேடை மயிலென வருவாள்காண்—இதுநல்ல நிமித்தமண்ணே.
(290)

### விருத்தம்.

மானிட மிருகம் பச்சி வருந்தியே ஊறுஞ் சென்மம்
தானிடம் வலமதானுல் தனக்கது நிமித்த மென்பார்
ஏனடா இதுவெல் லாம்வீண் ஈசனைப் பிறது பாரு
வானிடந் தெரியும் அந்த வழிதனில் நிமித்தம் காணே. (291)

### தரு.

கண்டிட்டுச் சரந்தூக்கும் பின்னிடைக் காணும் சுழிதலை மாறிநின்று
ஒண்டிட்டு இடமானுல் தெற்கு மேற்குடன் நடக்கலாம் உண்மை
[இஃதே. (292)

நன்றின்று பரஞ்சுழி இடைபின் னடந்து ஒருகலை வலமானுல்
தொன்றின்று வடகிழக்குச் சென்றுல் தொடுத்ததோர் கருமங்கள்
[கொடுத்திடுமே. (293)

பெண்ணுக்கு இடம்வலமா ணிந்தப் பெருமைசுழி சிவமா ணுக்கால்
ஒன்றுக்கு மாகாது வழிநடை யுலையும் பயணங்க ளொவ்வாதே.
(294)

தலத்துள்ள சாத்திரங்கள் மெத்ததா னிருந்து மண்டாண் டமிது
பலத்துடன் அடிக்குஞ் சரமிது பேருள்ள சாத்திர மாகுமண்ணே.
(295)

### கொச்சகம்.

சந்திரனீள் மேற்குதான் கிழக்குச் சூரியனும்
முந்திரவில் தெற்கு முக்கால் மேல்வடக்குந்
தந்திரமாய்ப் பார்த்து நடக்க வல்வீராய்
மந்திரந்தான் தந்தவல்லி மாத்திரையில் காண்பனண்ணே.
(296)

**விருத்தம்.**

ஆமிது நல்ல தென்று அக்ஷரந் தாக்கி னின்று
ஓமிது குறிதா னென்று உறுதியாய் மனத்தில் வைத்து
நாமிது காண வென்று நடந்துமாத் தூரில் சென்று
பூமிது வல்லி யார்தம் பொற்பதம் போற்றி னின்ருன். (297)

**தரு.**

அன்னே புருவனடு வல்லியாரே உன்னடிமை திருமகனு ரோடி
[னுடிப்
பின்னே இடையில் மூடிசுழியாடி அருள்பெறவே கருவிலுதித்
[துருவாகி
முன்னே மொழிந்தமொழி தனைக்கூடிமூன் முக்கியமாம்
[வேதாந்த நூல்கள்பாடி
என்னே இரவிமதில்தனில் தேடிப்பின் னிக்கணமே வாருமென்
[றேவினுன்காண். (298)

ஏவினுன் வெளியொளிதனைச் சேர்த்திப்ப வேகாந்த
மேகாந்தந் தன்னைப் பார்த்து
தாவினுன் அண்டரண்டந் தன்னில் கூத்துநீ
தானுடுகின்ற பதந்தன்னைக் கார்த்து
நாவினுன் சுழிப்பொய்கை மலர்ப்பூத் தந்தணர்க்
கமலமா யிரத்தெட்டு மாத்து
தூவினுன் கோவிலுக்குள் ளொன்றும் வாழ்த்தி
தமிழ்சொல்லும் வல்லிதனைக் கண்டுதொழுகிருன். (299)

தொழுதடி பணிந்தேத்திச் சரணஞ் செய்துநிற்க
சொன்னபின் வல்லி வாய்திறந்து சொல்வாள்
பழுதில்லை யோமகனே வருவோ மென்றுமாய்
பஞ்சாட் சரசுவ ரூபந்தான் விரிந்தாள்
வழுதில்லை யம்பலத்தில் செழுமதியூர் கையில்
மான்பிடித்துக் கரியுரித் தாடை சாத்தி
மழுமானுந் தரித்தானை வாழ்த்திப் போற்றிக்
கூடவந்தாள் வல்லி செல்வனுடன் வளிகூடி. (300)

**கொச்சகம்.**

வளிகூடச் செம்மையதாய் வந்துமதி யுள்ளவற்கு
தெளிபீட மாகமனந் தேனெனவே பூஜைசெய்து
வெளியூடு ஆடுகின்ற வேதாந்த வல்லி
வருமொழிவீ டறிந்துமன்ன னேர்புதுமை சொல்வாளே. (301)

**வெண்பா.**

புதுமைத் திருமயிலாள் பொற்பதங்கள் தான்தோண
முதுமைத் தரும்பவுசு முற்றுமே—பதுமை
ஒத்தரூபங் கண்டு ஊக்கமதி யுள்ளோனும்
சித்தர்பதஞ் சொல்வான் திறந்து. (302)

**தரு.**

இப்போ வாராளோ சிவகற்பந் தாராளோ
புட்பவனக் கறியுட் பொருள்பாடி
புத்திமதி சொல்லி சத்தியெனும் வல்லி—இப்போ. (303)

மாத்திரை கொண்டு வலிதலே யென்று
மரபு அறுபத்தி நாலுமே சென்று
பாத்திரா பாத்திரம் அமர்மதி யுண்டு
பஞ்சாட் சரமுண்டு மிஞ்சாத் திரவல்லி—இப்போ. (304)

எண்ணஞ்சு மூன்று கோணத்தி னின்று
ஏக வெளியி லிருளதை வென்று
விண்ணஞ்சு ஆயிரத் தெட்டிதழ் னின்று
விந்தச ரம்பூண்ட இந்த சரவல்லி—இப்போ. (305)

உள்வட்ட மிட்டு ஊத்தி வித்து
உள்மை யெழுத்து உபதேசம் தொட்டு
அவ்வட்ட மெட்டு அரியுரு விட்டு
அஷ்ட புவனத்தைத் தொட்டாடும் வல்லி— இப்போ வாராளோ. (306)

**விருத்தம்.**

வல்லியே வருவா ளென்று வசனிந்து மதியுள் ளோன்முன்
செல்லியே சபையுள் ளோர்முன் தோத்திரஞ் செய்வா னன்பாய்
தல்லியே புவன மெங்குஞ் சற்குரு வாகி நிற்கும்
சொல்லியே என்னை யாண்ட தேவியே என்று சொல்வான். (307)

**கொச்சகம்.**

சொல்வான்நில வடமுமிட்டுச் சுந்தரியைப் பூசைசெய்ய
செல்லான் திசைதோறும் செம்பொன்மணி பீடமிட்டு
வெல்வான் விதியெழுத்தை மெய்ப்பொருளை உச்சரித்து
வில்வான் புருவவல்லி மெய்ப்பதமே போற்றிநின்றான். (308)

**தரு.**

அன்னை யெனையீன்ற சிவஆனந்த வல்லியரே
உன்னையான் போற்றிசெய்ய யெனக்குற்பனந் தந்தருள்வாய். (309)

மாவிருள் சூழ்ந்துல கத்தின் மாள்வது போகாமல்
பூவிலிருள் முடிவிந்து இந்தப் பொய்கையில் பூத்ததுவே. (310)

பூத்து மனிதருடன் பொன்றியே போகாமல்
பார்த்துக் கருணை வைத்து உன்பதந் தந்தருள்வாய். (311)

தந்தைதாய் அன்னை சுற்றம் நீதாயென நம்பினேன்
முந்ததைத் தாக்கி மச்சமணி மூலாம்பதந் தந்தருள்வாய். (312)

பத்திநெடுங் காலமுன்னைப் பண்புடன் போற்றிசெய்ய
முத்திதர வருவாய் சிவமூர்த்தி குருவல்லியே. (313)

## விருத்தம்.

தல்லியே யன்னை யென்று தயவுடன் போற்றி வேதஞ்
சொல்லியே புவன மீதில் தோத்திரம் செய்து நிற்க
மல்லிகை பழுத்த செம்மை வளர்திரு வம்ப லத்தில்
வல்லியைச் செல்வன் கூட்டி வந்துமுன் தோன்றி னனே. (314)

தோன்றிட மதியுள் ளோனும் சுற்றிடம் வலம தாக
வேண்டியே அண்ணல் தன்றன் மெல்லடி தன்னில் வீழ்ந்தான்
ஊன்றியே மனத்தைப் பார்த்து ஒருமித்துக் கையால் பத்தி
ஆண்டியே வல்லி மைந்தா அப்பனே எழுக வென்றார். (315)

என்றவர் மொழியைக் கேட்டு எழுந்திருந் தவனுஞ் சொல்வான்
நன்றவர் இமையோர் தேசம் நடந்துநீ சென்று வாரும்
பண்டரம் பதத்தில் பாய்ந்துப் பார்த்துநீர் வல்லி தன்னைக்
கண்டரன் கூட்டி வந்து காரியஞ் சொல்வா யண்ணே. (316)

## கொச்சகம்.

அண்டபிண்டந் தன்னி லறியமகா வாகனத்தில்
நின்றவல்லி யாருடனுன் னேரெல்லாந் தானுரைத்து
தொண்டருமைத் தேடுகிறன் தோகையரே வாருமென்று
கண்டமதி யூறுவிட்டுக் காசினியில் கூட்டிவந்தேன். (317)

## விருத்தம்.

வந்தன னென்றோன் தன்னை மதியுள்ளோன் வணங்கிப் பின்னும்
உந்தனன் றனக்கு யானும் உடல்பொருள் ஆவி மூன்றும்
தந்தனே யாவுந்தன் தாளிணை யாதனில் சேர்ந்தேன்
எந்தனன் தாய்தான் வல்லி இருசரண் காட்டு வாயே. (318)

காட்டென்று கேட்க மன்னன் கமலமலர் முகத்தை நோக்கி
மூட்டென்று வாசி நாசி முனைநடு முடியில் நின்று
ஆட்டென்று என்னை யாட்டு அன்னையார் வல்லி தன்னைக்
கூட்டென்று கூட்டி வந்தேன் கோமுகத் தாளை போற்றி. (319)

### தரு.

இனிநான் பிழைத்தனண்ணே வல்லியெனக்
கருள்தருவாளுனக்கு மன்நாளும்—இனி நான்பிழைத்தனண்ணே
முன்னிடம் வலமாகச் சுற்றி முப்பிறகாரம் கலேயோகம்
என்னிடமாகவே தான் கொடுக்க இமையோர் தொழும்வல்லி இங்கு
[வந்தால்—இனிநான் பிழைத் தனண்ணே. (320)

சிவவரி வட்டமுனே நல்ல சிவகுரு தவமும் இனியருள் தரவும்
நவவரி யாசனத்தைத் தொட்டு நடந்தெந்தன் தாய்வல்லி நாட்
[டில் வந்தால்—இனி (321)

வாக்கியமதி மேலே நின்று வரியருத் தரனூர் அருளால்
பாக்கியம் பெற்றேனுன் வல்லி பதந்தர வெனக்குகந்து வந்தால்
—இனி நான் (322)

### கொச்சகம்.

அய்யா யெனேயீன்ற ஆதி சதாசிவமே
பொய்யாத வல்லிபாதம் போற்றி யெனக்காக
எய்யாம லோடியியல் மதியூர் சென்றுகண்டு
மெய்யாகக் காட்டிவந்தாய் மெத்தவரம் பெற்றனண்ணே. (323)

### விருத்தம்.

வரம்பெற வென்று சொல்லி மதியுள்ளோன் மனத்தால் பாடி
அறம்பெறு மந்தி ரத்தால் அல்லு காட்டிரித் துருவை யேத்தி
பரந்தரும் வடிவே யென்று பண்புடன் பூசை செய்ய
சிரம்பெறு கமல வல்லி சீடர்முன் றோன்றி னாளே. (324)

தோன்றிட மதியுள் ளோனும் சுற்றிடம் வலமாய் வீந்து
பூன்றிடப் பாதஞ் சென்னிப் புன்மையாய்ப் போற்றி செய்து
வேன்றிட வல்லி தானும் மெச்சியே எடுத்து வாழ்த்தி
தான்றிட வண்மை தன்னிற் தானவ உபதே சித்தாள். (325)

### கலிப்பா.

உபதேசித் தாள்புவன மொான்றென்றே சித்தர்மொழி
சிவதேச மாமெனவே சித்தருக்குக் கைக்கொடுக்க
நவதேச முண்டெனவும் நாதாந்த வீடெனவும்
சுபதேச ஞசினுனி சேர்க்குமணி மூலமுந்தி. (326)

முந்தித் திருநடன முனிவோர் பதஞ்சலிமுன்
திந்தித்தோ மென்னவுமே சென்றுடு கின்றதுபோல்
வந்தித்த பாதம் வணங்கி அகமகிழ்ந்து
தந்தித்தா மெனவே தான்சபையைச் சுத்திவந்தான். (327)

### தரு.

சுத்தி வலமாக வல்லியைத் தோத்திரஞ் செய்தவன் கோத்திரந்
[தான்
முத்தி பரயோகம் தாவென்று முன்னிடைக் கலையைத் தொட்டா
[டினனே. (328)

ஆடி மனந்தேரச் சிவவரை விட்டு உவ்வி லறிவாகி
கோடி வரையிருக்க தாய்குரு மணியார் மணிகூர் மணியே. (329)

கூர்மணி மூன்றுதல மந்தங் கொடுமணியோ மணிகோ மணிதான்
பேர்மணி யாறுதலங் காண்ப பெத்தெ னருண்மணிப் பேதையரே
(330)

பேதந் தவிர்த்தனது சிவயோகப் பெருமை யதருள் காட்டி
வாதம் விரித்தெனக்குச் சொல்லும் வல்லியே சொல்லு யனேன்
[மணியே. (331)

### கொச்சகம்.

மணியொன்று தற்பரத்தில் வந்துமதி சேருதற்குப்
பணிகின்றே னுன்பதத்தைப் பத்தி நெடுங்கால
மணிகின்ற நன்மாலை யம்மாலை தானுடத்
துணிகின்ற வர்க்கென்ன சொல்லுவாய் வல்லியேநீ. (332)

### தரு.

சிவ்வட்ட மிட்டோது நல்லதேக மணியாடும்
உவ்வட்ட மிட்டறியோ மெண்றேதித் தினம்பணியே. (333)

வவ்விட்ட மேற்சுழியி லவைவைத்து நெடுங்காலம்
அவ்வட்ட மிட்டக்காற் சிவமாமெனு மோமெனவே. (334)

நவ்விட மெவ்வடியிற் சுத்திநாட்டரிக் காலைநடு
ஐவ்வட்ட மொட்டாவி புத்தியாக வெளிதோன்றும். (335)

அகாரமுத லோடுகூட்டி யவ்விரண்டை வைத்தாற்
மகாரப் பிறப்பறுத்துச் சிவபாக்கியந் தான்கொடுக்கும். (336)

### கொச்சகம்.

கொடுக்குமென வுரைத்தாய் கோதையரே பூதமஞ்சும்
ஒடுக்க நிலைவீடு ஒன்றுமி டங்கருவி
அடுக்கு மிடமெங்கே அயன்மூன் றெருமாலை
தொடுக்கும் வகைக்குருவாய் சொல்லுவாய் வல்லியரே. (337)

### தரு.

அண்டத்தைச் சுற்றிவெளி யுருவானது தான துதான்
அண்டத்தில் நின்றகுரு யிந்தக் காலங்கிநீர் மண்ணதாம். (338)

மண்ணாரு வானதுடல் இந்த வாயுவே சிவனடா
அண்ணாரு வங்கிசிவன் வெளியப் பெனுமுப் பெனுமே. (339)

உப்புட லானதினுல் அருசி யொன்று மெலிதாகி
செப்புடன் பந்ததுபோல் இந்த தேகத்தி லாடினதோ. (340)

ஆடின தஞ்சுடனே மூல மானந்தந் தானந்தமா
யோடின தற்சிவனே கட்டி யோட்டிடு மாறிதமே. (341)

ஆறு படைவீடு அப்பா லாயிரத் தெட்டாகும்
கூடு மேநவ கோடிசித்தர் கூட்டத்தில் நாட்டம். (342)

நாடியிடை பின்னு மாச்சுழி நாள்மூன்று பன்னிரண்டா
யாடின சூரியனே மதியாக்கிடும் பாக்கியமே. (343)

**விருத்தம்.**

பாக்கியஞ் செய்தே னுந்தன் பதமது யணியப் பெற்றேன்
நோக்கிய சபையில் வந்து ஞுன்னறி வென க்குச் சொன்னுய்
தாக்கிய வேதச் சோதி சதாசிவ னருளி னுலே
ஆக்கிய வமுதை யூட்டி யாட்கொள்வா யண்ணே யென்ருன். (344)

ஆட்கொள்ள வேண்டு மென்ருல்
அல்லிமா னகரி லுன்னே
நாட்கொள்ளச் சொல்லி முன்னே
நலமுறை மூன்று தந்தேன்
கோட்கொண்ட மனத்தி னுலே
குவலயந் தன்னில் வந்து
தாட்கொண்டு பிறந்து மண்ணில்
தான்மதி கெட்டு நின்ருய். (345)

**தரு.**

மதிகெட்டு அம்பரத்தில் நான்சென்று
வாழுதற் ருவு மனதுவைத்து
துதியட்டபூரி மந்திரம் எனக்குநீ
சொல்லியே யாள்குரு வல்லியரே. (346)

அந்திர வெளியூடே யான்திரிந் தலையாம லுன்னருள் காட்டி
மந்திர கலையோகம் எனக்குவைத் தருள்வாய்குரு வல்லியரே.
(347)

காயாதி கற்பமுண்ண நல்ல கயிலாச சின்மயன் பதம்போற்ற
தோய னிலைக்கருவி யடக்கஞ் சொல்லியே ஆள்குரு வல்லியரே.
(348)

பின்னுக் கிடைநாக்கு இந்தப் பெருமை சுழிசிவன் தானுக்கு
உன்னுக் குரைனுக்கு ஐயனுக் குருவஞ்சொல் வல்லி யுத்தமியே.
(349)

### விருத்தம்

உத்தமி யென்று நீதான் உயிரெழுத் துண்மை கெட்டாய்
நித்தமும் மனமும் புத்தி நெறிதரு மாங்கா ரந்தான்
சித்தமு மறிவு தானுய் சிடந்தனில் சிவனுர் நின்று
சத்தமுந் தருவுண் டாக்குந் தகைமையை யறிந்து கூடே. (350)

### தரு

கூட்டுக்கு ளூட்டுமதி யுயிர்கொண்டு காலண்டமதில்
ஆட்டுக்கு ளாட்டுமாடா யவ்வானந் தனக்கதுவே. (351)

ஆனந்தத் துள்ளொளியாய் சுழியாக நடுவுதித்து
தானந்த மென்றடியிலவ் வைத்தாண்டிய நாக்கதுவே. (352)

தாண்டியிடம் வலமுன்னே டித்தானுரு வாகிநின்று
ஊண்டிய சிவ்வரியோ யென்றேது மொருநாக்கே. (353)

ஓடிவெளி யாடியிந்த ஒன்றெடி வாசலிலே
நாடினவ் வெழுத்தையொட்டி நாட்டிய நாக்கதுவே. (354)

நாட்டி நடுமனையில் ருசி நாவில் பாவுதைத்து
ஆட்டின் நாக்குமுனை நவ்வானது தானதுவே. (355)

### கொச்சகம்.

நன்னுக்கு அஞ்சுகலை நாள்மூன்று பன்னிரண்டு
பின்னுக்கு நாலுபதம் பெற்றபதி ஞரெனவும்
உன்னுக்கு உயிரெழுத்தை யோதுஞ் சுழினுக்குப்
பொன்னுக்கு வாயுன்னடி போற்றினேன் வல்லியரே. (356)

### தரு.

போற்றினேன் உன்பதத்தை அஞ்சுபூத வடிவாக்கி
மாத்திட வென்பிறவி கைமருந்தெனக் கிட்டாயே. (357)

எட்டெழுத் தாமோ யென்னைத் தானீன் றது ஆராரோ
ஒட்டெழுத்தா மந்திரஞ் சொல்லி ஓதுவாய் வல்லியரே. (358)

ஓதி யுணர்ந்தறிவு சிவனேமெனும் நாமெனவே
ஆதியோ டந்தமதில் உருவானது சொல்வல்லியே. (359)

வல்லியுனக் கடிமையாய் வந்தே னெனைக்காத்துச்
சொல்லியே ஓரெழுத்தின் மந்திரச்சூட்ச மெனக்கருள்வாய். (360)

### விருத்தம்.

சூத்திர மருள்வாய் என்று தோத்திரஞ் செய்து நின்றாய்
கோத்திரம் வாழ்க நல்ல குருவருள் பெற்று நீதான்
சாத்திரம் விட்டு ஞானச் சுதானந்த வல்லி [யேநீ]
பாத்திரங் கொள்வாய் தேவர் பதியுனக் கென்னலாமே (361)

பதியுனக் குண்டு என்று பாவையே சொன்னாய் உந்தன்
நிதியெனக் கருளிச் செய்து நிர்மலத் துரிய மந்திரந்
துதியென வகண்டந் தன்னை சுத்தவும் சூக்ஷமங் காட்டி
விதிதனை வெல்ல வல்ல மெய்ப்பொருள் தருவாள் தாயே. (362)

## தரு.

தாவென்று கேட்கவல்லி மதியுள்ள மன்னனுக்கு
மாவண்டு சுத்துகிற செம்மணிலை சொல்வாளே. (363)

சொல்லியே யாறுதல் வீட்டில் சூக்ஷனிலை காட்டி
அல்லிமத யானையைப் பரியாக்கமுன் சொன்னேனே. (364)

சொன்னேன் கரிபரி தானது தோனறின வீடறிந்தால்
பொன்னே நமக்குநீ தான்காட்டிப் போதம தாகாதோ. (365)

போதமத யானைபரி பூரண மானதடா
வேதமதஞ் சாதிபெற்ற வீடுநிலை பூதம். (366)

வீடுநிலை யோதியந்த வின்பத்தி னுலெடுத்து
ஓடுபல சாதி நீதான் ஒன்றெனக் கண்டுநில்லே. (367)

நிற்கநினை வாச்சுமெத்த நீடூழி வாழ்வாச்சு
சொற்கமது வாச்சுகண்டு சொன்னது நீச்சாச்சே. (368)

நீச்சுநிலை யறிந்துகரை நீயேற வேணுமென்றால்
பேச்சுநிலை முச்சுச்சுழி பொருளுள்ள தானச்சே. (369)

ஆச்சுது வாச்சுதடா மவுன மானது தானதடா
காச்சுது போச்சுதடா கனிருசி காணுமே குஞ்சரமே. (370)

குஞ்சரஞ் சோதியடா நல்ல குருபரஞ் சாதியடா
நெஞ்சுரப் போதியடா மெத்த நேர்விந்து நீதியடா. (371)

## விருத்தம்.

விந்தென்றும் நாத மென்றும் மெய்தனில் பிரித்துக் காட்டி
வந்தென்று மென்னை யாண்ட வல்லியே யுந்தன் பாதம்
தந்தென்றும் நாயேன் றன்னை சற்குரு வென்னைக் காத்தாய்
முந்தென்றுந் தந்தை தாயார் மொழிந்திடா யண்ணே
[யென்றான். (372)

அன்னையுந் தந்தை யாகி ஆண்மக்கள் பெண்டி ராகி
பின்னையும் பிறப்பு மாகிப் பெற்றதோர்ப் பிள்ளை யாகி
முன்னையும் மூத்தோ ராகி முனிவருக் காதி யாகி
என்னையு மாண்டா னாகி இருக்கின்ற னிறையோன் றானே. (373)

## தரு.

ஆனாலு முங்கள்குல மெத்தனிப் படிவல்லி—அது
தானாலு சாதி முறைமை மதியுள்ளவான் சொல்வீர். (374)

ஆண்மக்களை பிள்ளை யாமென்று சொல்வதென வல்லி
பெற்றதாய் மக்கள் பிள்ளையை ஆண்மக்களாம் எனச்
[சொல்லீர். (375)

மகன்மாமியை ஈசன் கையில் தரித்தானே வல்லி
நாலுக மறியாதோ மழுவேந்தினன் சொல்லீர். (376)

ஒருசிலை கட்டையுக முடிவாச்சுதே வல்லி
பின்மருசிலை கொள்ளவகை யில்லைகாண் மதியுள்ளீர். (377)

உண்ணச்சோ றில்லாமலே பசித்தான்மால் வல்லியவன்
பின்னைச்சார் மண்ணையும் வெண்ணையுண்டான். மதியுள்ளீர். (378)

வாழ்க்கைப் படுமுன்னே மைந்தனைப் பெற்ற யேவல்லி
இந்தச் சேர்க்கைக்கு வையாமலடென்று செப்புதே சொல்லீர்.
(379)

தந்தை யில்லாப் பிள்ளைதான் பெறவாகுமோ வல்லி—பெற்றால்
மந்தையில் வைத்து மானிசம் போவதென் சொல்லீர். (380)

உந்தன்குல மெத்த அதிக மென்றேனுன் வல்லி
உந்தன்குல சுக்குல மானது வேதெனச் சொல்லீர். (381)

மெத்தப் புழுக்கச் சினிகுருவின் பத்தால் வல்லி
உன்னை நித்தம் பழுக்க விசாரித்தேநீ மெத்ததல்லி. (382)

தல்லிப்பயல் நீதான் மதிகெட்டன் தாண்டாகுரு
வல்லிக்கு வேறு வகுத்தினிச் சொல்லவேண்டாம். (383)

சொன்னால் சுளுக்கென்னுதோ உனக்கென்ன தான்வல்லி—அந்த
மென்னுப் பயனிலே மோக்ஷவழி மேவச் சொல்லீர். (384)

பதிகெட்டா னென்றசொல் லாருக்கு ஆச்சடி வல்லியம்
பராபரத்தே நித்தம் பாய்ந்தோர்க்கு ஆச்சென்று சொல்லீர்.
(385)

விதிகெட்டா னென்றசொல் லாருக்கு ஆச்சடி வல்லியிந்த
வேதச் சிரோமணி ஞானிக்கு ஆச்சென்று சொல்லீர். (386)

மதிகெட்டா னென்றசொல் லாருக்கு ஆச்சடி வல்லிபாய்ந்தும்
சுத்தான அம்பரந் தன்னிலே வாழ்வோர்க்குச் சொல்லீர். (387)

கெதிகெட்டா னென்றசொல் லாருக்கு ஆச்சடி வல்லிசற்றுங்
கேள்வியில் லாமூடர் தங்களுக் காச்சென்று சொல்லீர். (388)

மெத்தப் பழிப்பாச்சு லோகத்தை நான்வேண்டேன் தல்லியந்தச்
சுத்தவெளிய யொளிதன்னி லென்னை வைப்பாய் வல்லி. (389)

வைத்திடுஞ் சித்தமென் பாக்கிய மானந்தஞ் சொல்லியென்றும்
கைத்திடங் காட்டிக் கைலாசந் தந்தருள் வல்லி. (390)

பேசப் பெருமைப் புகழெல்லைப் பெற்றுயே வல்லிநித்தம்
ஏசப் பொறுமை பொறுத்தேனை யாளுவாய் தல்லி. (391)

தேசத்தில் ஓடித் திரியாமல் நீவகை சொல்லியுன்
வேஷத்தைக் காட்டி விளைவமு தூட்டுவாய் வல்லி. (392)

பாருத்துப் பாவினந் நாவின்ன மாமதி சொல்லியுன்
சீருத்து யிச்சித்துக்கு கருவித்தாரஞ் செப்புவாய் வல்லி. (393)

## விருத்தம்.

வல்லியே மதிதான் பூண்ட மங்கைமால் தங்கை யேநீ
அல்லிமா நகரி லென்னை ஆட்கொண்டு மெள்ள தீக்ஷை
சொல்லியென் பிறவி தீர்க்கத் தொல்புவி யதனில் வந்தாய்
தல்லியே குருவே யோக சாதனை தருவாய் தாயே. (394)

## கொச்சகம்.

தாயே புருவமதில் தானுடுகின்ற வல்லி
நாயேன் படுந்துயரம் நாடோறும் கண்டுவந்தாய்
பேயேனு ஞானும் பிள்ளையென நீகாத்து
வாயே திறந்துகுரு வாக்கியங்கள் சொல்வாயே. (395)

## விருத்தம்.

வாக்கியங் கள்பல சொன்னேன் வருகணு வதீதஞ் சொன்னேன்
பாக்கிய னன்மை தின்மை பாரினில் பிறப்புஞ் சொன்னேன்
நோக்கிய கருவி தூய னுன்னிட மதியுஞ் சொன்னேன்
தாக்கிய பூஜை கற்பந் தான்சொன்னேன் மதியுள் ளோனே. (396)

மதியுள்ளோன் என்று நீதான் வாக்கினுற் சொன்னாய் வல்லி
பதியுள்ள தேசம் பொன்னும் பரிகரி யுள்ள தெல்லாம்
விதியுள்ள படியுண் டென்று விட்டுந்தன் பதத்தில் சேர்ந்தேன்
துதியுள்ள வீட்டில் வைத்து முற்றுரைதந்து வாழ்விப் பாயே. (397)

## கொச்சகம்.

வாழ்வாய் குருபதத்தில் வல்லியருள் பெற்றுநன்றாய்
வாழ்வாய் சதாசிவன்போல் வஞ்சிமார்த் தாண்டன்மைந்தா
வாழ்வாய் பதியாறு வைத்துமதி யுளநாட்டில்
வாழ்வாய்காண் நீடூழி வளர்மதிதா னுள்ளமட்டும். (398)

அன்னையார் சேர்க்கு மையனும் வாழி
அல்லி மானகர் வல்லியும் வாழி
என்னை யீன்ற சதாசிவன் வாழி
யேக போக திருமூலர் வாழி

பின்னையுங் கொங்கண ரென்றும் வாழி
பெருஞ்சட்டை முனிநித்தம் வாழி
முன்னை யும்நவ கோடி சித்தர்
மூல யோகிகள் வாழியர் தாமே. (399)

சத்தசிவ மயேசுவரன் ருத்திரன் சாத்து மாலயன்தா னென்று
[வாழி
மத்த லோகங்க ளீரேழும் வாழி வண்மைபெற்ற பெரியோர்கள்
[வாழி
சித்த மேசிவ முத்தர்வாழி தேக சித்தர்கள் பெற்றவா வாழி
நித்தமுங் கயிலாச சின்மயம் நீடூழி வாழி வாழிய தாமே. (400)

ஆதி வேதங்கள் ஐந்தாறு வீடுமால் சாத்திரம் கோத்திரம் வாழி
நீதி யோதிய தேசங்கள் வாழி நித்தமும்சித்து செய்வோர்கள்
[வாழி
சாதியோ ரிரண்டும் வகையுயர்த் தருமநீதி தழைத்தென்றும் வாழி
[வாழி
ஓதியே மதியுள்ளான் உலகத் துணர்ந்தவர் ஊழி வாழியர் தாமே.
(401)

## விருத்தம்.

குருநெறி யருளி னாலே கோந்தீமா தேசத் துள்ளே
அருள்நெறி வளருஞ் சோதி அல்லிமா நகரி லேந்து
தருநெறி ஞான போத சங்கீதம் வித்தை யோகம்
வருநெறி அறிவு நன்மை வகுத்தொரு வயண மாகத்
திருநெறி மதிநூல் சொன்னான் சித்தரா னந்த முற்றே. (402)

சற்குருவே துணை.

முற்றிற்று.

# LIST OF AGENTS FOR THE MADRAS GOVERNMENT PUBLICATIONS.

---

## IN CITY.

ACCOUNT TEST INSTITUTE, Egmore. Madras.
CITY BOOK COMPANY, Post Box No. 605, Madras-4.
HIGGINBOTHAMS, Madras.
P. VARADACHARI & Co., Madras.
THE SOUTH INDIA SAIVA SIDDHANTHA WORKS PUBLISHING SOCIETY, LIMITED, Madras.
VENKATARAMA & Co., Madras.
V. PERUMAL CHETTI & SONS, Madras.
V. RAMASAMY SASTRULU & SONS, Madras.

## IN MUFASSAL.

THE EDUCATIONAL SUPPLIES COMPANY, R.S. Puram, Coimbatore district
D. SREEKRISHNAMURTHY, Ongole, Guntur district.
M. SESHACHALAM & Co., Masulipatnam, Krishna district.
HINDUSTAN DIARY PUBLISHERS, Vijyavada, Krishna district.
E. M. GOPALAKRISHNA KONE, Madurai, Madurai district.
K. P. AHMED KUNHI & BROS., Cannanore, Malabar district.
THE DECCAN PUBLISHING HOUSE, Kozhikode, Malabar district.
A. VENKATASUBBAN, Vellore, North Arcot district.
TIMES MODERN MART., Salem.
K. BHOJA RAO & Co., Mangalore, South Kanara district.
U. R. SHENOY & SONS, Mangalore, South Kanara district.
SRINIVAS & Co., Kumbakonam, Tanjore district.
P. N. SWAMINATHA SIVAN, Pudukkottai, Tiruchirappalli district.
S. KRISHNASWAMI & Co., Tiruchirappalli, Tiruchirappalli district.
V. S. VASAN & Co., Tirunelveli, Tirunelveli district.

## IN OTHER STATES.

BANVARILAL JAIN, Agra.
BENARES BOOK CORPORATION, P.O. Lanka, Banaras.
SREE ABHIRAVA VAIDYA SHARADA BOOK DEPOT, Bangalore-2.
THE BANGALORE BOOK CENTRE, Bangalore-2.
THE STANDARD BOOK DEPOT, Bangalore-2.
HARI GOVIND BOOK STALL, Baroda.
NEW BOOK COMPANY, Bombay.
D. B. TARAPOREWALA SONS & Co., Bombay.
THACKER & Co., LTD., Bombay.
N. S. WAGLE, Girgaun, Bombay.
THE POPULAR BOOK DEPOT, Lamington Road, Bombay-7.
THE BOOK COMPANY, Calcutta.
LAW BOOK SOCIETY, Calcutta.
THACKER SPINK & Co., Calcutta.
R. CAMBRAY & Co., Calcutta.
CHAROTAR BOOK STALL, Anand (Gujerat).
HYDERABAD BOOK DEPOT, Hyderabad.
OSMANIA UNIVERSITY STUDENTS' CO-OPERATIVE BOOK DEPOT, Lallaguda P.O., Hyderaba (Deccan).
S. M. JAGANNATHAM, Nagercoil.
BHAWNANI & SONS, New Delhi.
JAIN BOOK AGENCY, New Delhi.
INTERNATIONAL BOOK SERVICE, Poona.
INTERNATIONAL BOOK HOUSE, Trivandrum